# பெருமாள் திருமொழி.

## 9-வது பத்து.

வன்றாளினிணை வணங்கி வளநகரந் தொழுதேத்த
மன்னனாவான்,
நின்றாயை அரியணைமே லிருந்தாயை நெடுங்கானம்
படரப்போகு,
என்றாள் எம்மிராமாவோ உனைப்பயந்த கைகேசி
தன்சொற்கேட்டு,
நன்றாக நானிலத்தை யாள்வித்தேன்
நன்மகனே யுன்னை நானே.

2 வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டிருநிலத்தை வேண்டாதே
விரைந்து, வென்றி,
மைவாய களிறொழிந்து தேரொழிந்து மாவொழிந்து
வனமேமேவி,
நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையு மிளங்கோவும்
பின்புபோக,
எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ எம்பெருமா
னென்செய்கேனே.

3 கொல்லணைவேல்வரி நெடுங்கண் கௌசலைதன் குலமதலாய்
குனிவில்லேந்தும்,
மல்லணைந்த வரைத்தோளா வல்வினையேன் மனமுருக்கும்
வகையேகற்றாய்,
மெல்லணைமேல் முன்துயின்றா யின்றினிப்போய் வியன்கான
மரத்தின் நீழல்,
கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ காகுத்தா
கரியகோவே.

4 வாபோகுவா இன்னம் வந்தொருகால் கண்டுபோ
மலராள் கூந்தல்,
வேள்போலு மெழில்தோளி தன்பொருட்டா விடையோன்
றன்வில்லைச் செற்றாய்,
மாபோகு நெடுங்கானம் வல்வினையேன் மனமுருக்கும்
மகனே இன்று,
நீபோக வென்னெஞ்ச மிருபிளவாய்ப் போகாதே
நிற்குமாறே.

5 பொருந்தார் கைவேல்நுதிபோல் பரல்பாய
மெல்லடிக்கள் குருதிசோர,
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப வெம்பசி
நோய்கூர இன்று,
பெரும்பாவியேன்மகனே போகின்றாய் கேகயர்கோன்
மகளாய்ப்பெற்ற,
அரும்பாவி சொற்கேட்ட வருவினையே னென்செய்கே
னந்தோ யானே.

6 அம்மா,வென் றுகந்தழைக்கு மார்வச்சொல்கேளாதே
அணிசேர்மார்வம்,
என்மார்வத்திடை யழுந்தத்தழுவாதே முழுசாதே
மோவாதுச்சி,
கைம்மாவின்னடையன்ன மென்னடையும் கமலம்போல்
முகமும் காணாது,
என்மானை யெம்மகனை யிழந்திட்ட இழிதகையே
னிருக்கின்றேனே.

7 பொன்பெற்றா ரெழில்வேதப் புதல்வனையும் தம்பியையும்
பூவைபோலும்,
மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென் மருகியையும்
வனத்திற்போக்கி,
நின்பற்றா நின்மகன்மேல் பழிவிளைத்திட் டென்னையும்
நீள்வானில்போக,
என்பெற்றாய் கைகேசீ யிருநிலத்தினிதாக
விருக்கின்றாயே.

8 முன்னொருநாள் மழுவாளிசிலைவாங்கி யவன்தவத்தை
முற்றும்செற்றாய்,
உன்னையு முன்னருமையையு முன்மோயின் வருத்தமு
மொன்றாகக் கொள்ளாது,
என்னையு மென்மெய்யுரையும்மெய் யாக்கொண்டு
வனம்புக்க வெந்தாய்,
நின்னையே மகனாகப் பெறப் பெறுவே னேழ்பிறப்பும்
நெடும்தோள்வேந்தே.

9 தேன்நகுமாமலர்க்கூந்தல் கௌசலையும் சுமித்திரையும்
சிந்தைநோவ,
கூனுருவில் கொடுந்தொழுத்தைசொற் கேட்டகொடியவள்
தன்சொற்கொண்டின்று,
கானகமே மிகவிரும்பி நீதுறந்த வளநகரைத்
துறந்துநானும்,
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன் மநுகுலத்தார்
தங்கள்கோவே.

10 ஏரார்ந்த கருநெடுமா லிராமனாய் வனம்புக்க
வதனுக்காற்றா,
தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்றான்புலம்பிய
வப்புலம்பல் தன்னை,
கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன் குடைக்குலசேகரன்
சொற்செய்த,
சீரார்ந்த தமிழ்மாலை யிவைவல்லார் தீநெறிக்கண்
செல்லார்தாமே.

## டென்மார்க்கு அரசனாகிய

# ஹாம்லெத்.

---

டென்மார்க்கு தேசத்துச் செங்கோல்செலுத்திவந்த ஹாம் லெத் என்னுமரசன் துர்மரணமாய்ச் சடிதியில் மாண்டுபோக, புவனிறந்த இரண்டு மாதத்திற்குள், அவன் மனைவியான கர்த்ரூட் ன்னும் இராணி தன் மைத்துனனாகிய க்லாடியூவை மணம்புரிந் ாள். தேசவழக்கத்தைச் சிந்திக்காமல் இத்தனை விரைவில் ணம்புரிந்த ராஜ விதவை மதிகெட்டவளென்று வைதார் சிலர்; காண்ட கணவன் இறந்ததை நினைத்து உருகாத வன்னெஞ்சு டைய பாதகியென்று தூற்றினார் சிலர்; குணங்கெட்ட நீலி யன்று திட்டினார் சிலர்; அவள் செய்தது சகல ஜனங்களுக்கும் வறுப்பாயிருந்தது. காரணம் யாதெனின், 'அவள் புனர்விவா ம் செய்துகொண்ட க்லாடியூ ரூபத்திலாவது குணத்திலாவது வ்விதத்திலும் இறந்த அரசனை ஒத்தவனல்லன்; அவன் காணு மவராலும் அவமதிக்கப்படும் குரூபி; அறிந்தோரால் அலக்ஷி ஞ்செய்யப்படும் அயோக்கியன். அவன் ராணியை மணம் ரிந்து, பட்டத்திற்கு முறைமையான சுதந்தரமுள்ள இளவரசனா ய ஹாம்லெத்தை மாள்வித்து, டென்மார்க்கு ராஜ்யத்தில் அரசு சலுத்தக்கருதி, தன் சகோதரனை அந்தரங்கத்தில் கொன்றானெ ச் சிலர்க்குச் சந்தேகமுண்டாயிற்று.

அரசன் மனைவி ஆலோசனையின்றிப் புனர்விவாகம் செய்து காண்டதைப்பற்றி, முக்கியமாய் இளைஞனாகிய அவள் மைந்த னுக்கு மிகுந்த விசாரம் உண்டாயிற்று. ஏனெனில், அவன் காலையுண்ட தந்தையைக் கடவுளைப்போல நினைத்து நெஞ்சுரு ப் பூஜித்து வந்தான்; அன்றியும் அவன் சிறிதும் நெறிமுறை வழுதமானியாதலின், தன் தாய் குலமாதர்க்குரிய நெறிதவறிச்

செய்த அதிக்கிரமத்தை எண்ணி எண்ணி மனம் நொந்து வருந்தினான். தந்தை இறந்ததுபற்றித் தீராத் துயரமும், தாய் மறுமணம் செய்ததுபற்றித் தொலையா வெட்கமும் மேலிட்டதனால், அவன் உள்ளத்தில் ஆறாத துக்கம் குடிகொண்டது; முன் அவனுக்கு இருந்த அகமகிழ்ச்சி பற்றறத் தொலைந்தது; அவன் முகக்களையும் காந்தியும் சிறிதும் இல்லாதொழிந்தன; கல்வியில் உண்டாயிருந்த இச்சையைக் கனவிற் கண்ட காட்சிபோல் அவன் மறந்தான்; ராஜகுலத்திற் பிறந்த இளைஞர் பயிலத்தகும் வேட்டை முதலிய விநோதங்களில் அவனுக்கு எள்ளளவும் பிரீதி இல்லாமற்போயிற்று; இந்தப் பூலோகமோ, களை திரளாய் அடர்ந்தோங்கி வளர்ந்து, நறுமணம் கமழும் பூஞ்செடிகளைத் தலையெடுக்வொட்டாது சிதைவிக்கும் புற்பூண்டுகளையுடைய காட்டிற்கு ஒப்பாக அவன் எண்ணத்தில் தோன்றியது; இத்தனைநாள் இங்கிருந்தது போதுமென்று அவன் மனம் அலுப்புற்றது. சிந்தையிற் சிறப்புற்றோனாகிய ஒரு ராஜகுமாரனுக்குக் குலமுறையாகக்கிடைத்த அரசுரிமையைப் பிறர் அபகரித்துக்கொண்டால், அவன் மனம் புண்ணாகி, அந்த வபகீர்த்தியை எளிதில் மறவானே; ஆனாலும், இந்த ஹாம்லெத்தின் மனதை வருத்தியது ராஜாதிகாரம் கைகடந்துபோகுமோவென்னும் ஐயமல்ல; தந்தை உயிர்வாழ்ந்திருக்கும்பொழுது, அவரிடத்தன்புகூர்ந்து, அவர் சொற்படி நடந்து, நகமும் சதையும்போல் அவருடன் நட்புப்பொருந்தி, அவரை விட்டு விலகாதிருந்த தன் தாய், அன்பும் அருளும் குடிகொண்ட அவ்வுத்தமர் இறந்த இரண்டு மாதத்திற்குள், நீதிவரம்பின்றி மணமுறை தவறி, மைத்துனனை மறுமணம் புரிந்தாளென்பதேயாம். மேலும், அரசர்க்குரிய உத்தமகுணங்கள் ஒன்றுமில்லாத ஒருவருக்கு மனைவியாகத் தீர்க்காலோசனையின்றி அவள் உடன்பட்டது அவன் உள்ளத்தை வாள்கொண்டு வெட்டுவதுபோலப் பின்னும் வருத்தியது. பத்து ராஜ்யத்தைப் பறிகொடுத்தாலும் சிறிதும் துணிவழியாத தீரனாகிய அவ்விளவரசனை மனமெலிவித்துத் துணிவொழிவித்து, அவனுக்கு என்றும் மறத்தற்கு அரிய மனத்துன்பம் வருவித்ததுமிதுவே.

அவனது மனத்துயரம் மறக்குமாறு தாய் செய்த தந்திரமும், சிறிய தந்தை செய்த முயற்சியும் சிறிதும் சித்தி பெறவில்லை. தந்தை இறந்த துக்கத்திற்கு அறிகுறியாகக் கட்டிய கறுப்பு வஸ்திரத்தை மைந்தன் ஒரு நாளும் களையவில்லை. தாய்க்குப் புனர்விவாகம் நிறைவேறிய மங்கலதினத்திலும் அவன் அவ்வஸ்திரமே தரித்திருந்தான். அரண்மனையில் அன்று நடந்த களியாட்டொன்றிலும் அவன் மனம் கலக்கவில்லை. அந்த நாள் தன் குலத்தில் தீரா வசையை நிலைநிறுத்தும் தீயநாளெனவே அவன் சிந்தையில் தோன்றியது.

தந்தை இறந்தவிதம் இன்னதென்று சந்தேகமறத் தோன்றாததுபற்றி, ஹாம்லெத்துக்குப் பின்னும் மனத்துன்பம் அதிகமாயிற்று. அரசன் அரவந்தீண்டி இறந்தானென்று க்லாடியூ சொல்லக் கேட்டு, ராஜகுமாரன் அவ்வரவம் க்லாடியூ என்னும் கொடியனேயென அனுமானங்கொண்டனன்; அதாவது, அரசுரிமையை அபகரிக்கும்பொருட்டுத் தன் தந்தையை க்லாடியூ கொலைசெய்தானென்றும், கடித்துக்கொன்ற சர்ப்பம் சிங்காதனம் ஏற இடம் பெற்றதென்றும் அவன் எண்ணினான்.

இவ்வுத்தேசத்தில் உண்மை எவ்வளவோ, தாயைக்குறித்து என்ன நினைக்கத் தகுமோ, இக்கொலைத்தொழிலுக்கு அவள் அந்தரங்கத்தில் உடன்பட்டிருந்தாளோ, அவள் அறிந்து, அவள் அனுமதிப்படி கொலைத்தொழில் நடந்ததோ அல்லவோ, இந்த விவரம் ஒன்றும் ஐயந்திரிபறத் தெரியாததனால், அநுதினமும் அவன் மனம் தாமரையிலையில் தண்ணீர்த்துளிபோலத் தளம்பித் தடுமாறியது.

இங்ஙனமிருக்கையில், இறந்துபோன அரசனது உருவத்துக்கொப்பாகிய வடிவமொன்று அரண்மனைவாசலுக்கு எதிர் உயர்தளத்தில் அர்த்தராத்திரியில் அடுத்து இரண்டு மூன்று நாள் தோன்ற இரவில் காவல்காக்கும் ராணுவசேவகர் கண்டார்களெனப் பிறந்த சத்தம் ராஜகுமாரன் செவிக்கு எட்டிற்று. அவ்வுருவம் அரசன் தரிக்கும் க்வசத்தையே பாதாதிகேசபரியந்தம் தரித்

துக்கொண்டிருந்தது. அந்த வடிவத்தைக் கண்டவர்களில் ஒருவன் ஹாம்லெத்தின் இன்னுயிர்த்தோழனாகிய ஹொரேஷியோ. கண்ட காலத்தையும் கோலத்தையும் பற்றி அவர்கள் அனைவருடைய வாய்ப்பிறப்பும் ஒத்திருந்தது. அவர்கள் சொல்லியதாவது: கடிகாயந்திரத்தில் பன்னிரண்டு மணி அடிக்கவும், அவ்வுருவம் வெளிப்பட்டது. அதன் முகம் மலர்ந்திருக்கவில்லை, சற்று வாடியிருந்தது; முகத்தில் கோபம் தோன்றவில்லை, வியசனம் மேலிட்டிருந்தது; விகாரமாகத் தோன்றிய அதன் தாடி ரோமம் அரசனுக்கிருந்ததுபோல் இளநரை நரைத்திருந்தது; அவர்கள் பேசியதற்கு அது மறுமொழியொன்றும் பகரவில்லை; ஒருமுறை மாத்திரம் அது தலை நிமிர்ந்து பேச இதழ் குவிப்பதுபோல் உன்னிப் பார்த்தது. அப்பொழுது விடியற்காலமாகிக் கோழிகூவிற்று. கண்ணிமைப்பொழுதில் மேகம் மின்னி மறைந்ததுபோல், அவர்கள் கண்டகாட்சி நின்ற இடத்தை விட்டு நீங்கிச் சென்றது என்பதாம்.

இவ்வாறு அவர்கள் கூறியது கேட்டு இளவரசன் மிகவும் ஆச்சரியமடைந்தான். அவர்கள் மொழிந்தது முற்றும் மெய்யெனவே தோன்றியதனால், அவர்கள் கண்டது காலஞ்சென்ற தந்தையின் உருவமெனவே அவன் நிச்சயித்து, "இந்த வடிவம் வீணாகத்தோன்றவில்லை, ஏதோ சங்கதி சொல்ல வந்திருக்க வேண்டும். இதுவரையில் அது அவர்களுடன் ஒன்றும் உரைக்கவில்லையாயினும் என்னைக் கண்டால் வாய்திறந்து பேசும்." என மனம் தேறி, அன்றிரவு அதைக் காணினும் காணலாமென வெண்ணி, காவற்சேவகருடன் விழித்திருக்கவேண்டுமென வுறுதிகொண்டு எப்பொழுது இரவு வரப்போகின்றதென மிகப் பதைத்துக்கொண்டிருந்தான்.

அஸ்தமனமாகி இருள் படரவும் அரசன்மைந்தன், உருவமொன்று வந்துலாவியதென வதந்தி பிறந்த உயர்தளத்தில் ஹொரேஷியோ மார்செல்லஸ் எனும் இருவருடன்போய் நின்றான். அன்றிரவு குளிர் அதிகம்; கடும்பனிக்காற்று வீசியது; தேக

மெங்கும் குளிரால் விறைத்தது. ஹாம்லெத், ஹொரேஷியோ, மார்செல்லூ இம்மூவரும் சகிப்பதற்கு அரிய குளிர் அன்றிரவு தலைப்பட்ட காரணம் ஏதென்று சம்பாஷித்தார்கள். அவ்வமயத்தில் ஹொரேஷியோ பிதாவினுருவம் இதோ வந்ததென்று கூவினான்.

தன்னைப் பெற்று வளர்த்து முன்னுக்குக் கொண்டுவந்து திடீரென்று இறந்த அருமைத்தந்தையின் உருவத்தைக் கண்டவுடன், ஹாம்லெத்துக்கு ஆச்சரியமும் அச்சமும் உண்டாயின. அது தீக்குணமுள்ளதோ நற்குணமுள்ளதோ, நமது ஜீவனுக்கு ஆங்காலத்திற்கு வந்ததோ போங்காலத்திற்கு வந்ததோ என விவரம் தெரியாது சந்தேக ஸ்திதியிலிருந்து வருந்தியதனால், அவன் நடுநடுங்கித் தடுமாறி, அண்ணாந்துபார்த்து, வானத்தை நோக்கி, ஓ தெய்வங்காள், விண்ணவர்காள்! இந்த ஆபத்தினின்றுந் தப்புவித்து எங்களைக் காத்தருள வேண்டுமெனப் பிரார்த்தனை செய்தான். வரவர அவனுக்குப் பயம் தெளிந்தது. அவ்வுருவம் அவனுக்குத் தந்தையுருவமாகவே தோன்றியது. அன்றியும், அது மிகவும் பரிதபித்து வருந்துவதுபோலும், அவனுடன் சம்பாஷிக்க ஆசைகொள்வதுபோலும் முகக்குறி காட்டியது. இறந்த தந்தை மீண்டும் பிழைத்தெழுந்து வந்து கண்ணுக்கெதிரில் நிற்பதுபோலவே காணப்பட்டதனால், அவருடன் பேச ஹாம்லெத்துக்கு வாய் பதைத்தது; பிதாவைப் பெயர் சொல்லி அழைக்க அவன் பின்னிடாது, "ஹாம்லெத் என்னும் பெயர் பூண்ட என் அருமைப்பிதாவே, உலகாளுமரசே, என விளித்து, இறந்தபின் தங்கள் உடல் முறைமைப்படி இடுகாட்டில் அடக்கம் செய்யப்பட்டதை நாங்கள் கண்ணாரக்கண்டிருந்தும் தாங்கள் மீண்டும் எழுந்து வெண்ணிலாக்காலும் இந்த இரவில் மண்ணுலகத்திற்கு வந்த காரணம் ஏதென்று அறிய விரும்புகிறேன்; என் மேல் அருள்புரிந்து உரைத்தருள்வீராக; சலித்துத் தவிக்கும் தங்கள் ஆவிக்கு உபசாந்தி செய்யத்தகும் ஏதாயினும் எங்களாலாவதிருந்தால், அதைக் கருணை கூர்ந்து கட்டளையிடுங்கள்; ஆகுமனைத்தும் ஆவலுடன் செய்வோம்" என வேண்டி வினவினான்.

வினவவும் அவ்வுருவம் சற்றெட்டச் சென்று ஒதுக்கிடத்தில் தனித்திருந்து சம்பாஷிக்கும்பொருட்டு, தன்னுடன் வரும்படி ஹாம்லெத்துக்குக் கையிற்பிடித்த தடியால் குறிப்பித்தது. அந்தக் குறிப்பைக் கண்ட ஹொரேஷியோவும், மார்செல்லூவும் ராஜகுமாரனைப்பற்றி விசாரமுற்று, "நமக்குத் தோன்றியது உன் தகப்பனுருவமேயென உறுதிசொல்லமுடியாது; மானிட உயிர்க்குத் தீங்கு செய்ய நாடும் பிசாசங்களின் பொல்லாத உருவமாயிருப்பினும் இருக்கலாம்; அப்படி இருந்தால், உன்னை நயம் சொல்லி அழைத்துச்சென்று, அருகிலிருக்கும் கடலில் விழுத்திக் கொன்றாலும் கொல்லும்; அல்லது குறவரும் மருளும் குன்றினுச்சியில் உன்னை ஏற்றி, உன் கண்ணுக்கு எதிரில் கோரவடிவு தாங்கி நின்றாலும் நிற்கும்; நீ அதைக் கண்டு மதிமயங்கித் துணிவொழிந்து நடுநடுங்கித் தடுமாறுவாய்; ஆதலால், எவ்விதத்திலும் இவ்வுருவத்தை நம்பித் தொடராதே; தொடர்ந்தபின் நேரிடும் ஆபத்தினின்றும் உன்னைத் தப்புவிக்க வல்லவர் இல்லை" எனப் பலவாறு புத்திமதிகள் சொல்லி, இளைஞனைத் தடுக்க முயன்றார்கள். அவர்கள் சொன்ன நற்புத்தியும், அவர்கள் செய்த விண்ணப்பமும் அவன் செய்த மன உறுதியை எவ்வளவும் தவிர்க்கவில்லை. மரணத்திற்கு அஞ்சுபவர்க்கன்றோ பிராணன் பெரிது. ஹாம்லெத்து தந்தை இறந்தபின்பு தன் பிராணனைத் திணமாயெண்ணியிருந்ததனால், உயிர்போவதைப்பற்றி அவன் அணுவளவும் அஞ்சவில்லை, ஆத்மா என்றுமழிவற்றதாதலின் அதனைத் துன்புறுத்துபவர் எவருமில்லை என மொழிந்து அவன் ஆண்சிங்கத்தைப்போலத் துணிவும் வீரமுமுடையோனாகி, அவர்கள் பிடித்த பிடியை ஒரு வீச்சில் திமிறி விலகி, தந்தைவடிவம் வழிகாட்ட, அடிபிடித்துத் தொடர்ந்தான்.

எட்டாக்கையில் ஏகாந்தமாய் இருவரும் போய்ச் சேர்ந்தபின், அதுவரை மௌனமாயிருந்த உருவம் வாய் திறந்து: பிள்ளாய், என்னை அன்னியனென்று எண்ணாதே; நான் உனது தந்தை ஹாம்லெத்; நான் அநியாயமாகக் கொலையுண்டு இறந்தேன்; என்னைக் கொன்றவன் என்னுடன் பிறந்த உனது சிற்

றப்பன் க்லாடியூ; அவனைக்குறித்து நீ உனது உள்ளத்தில் எண்ணியிருப்பது உண்மைதான்; அவன் என் தாரத்தையும் கிரீடத்தையும் அபகரிக்கும்பொருட்டு என்னை வதைசெய்தனன். நான் பிரதிதினம் அபரான்னத்தில் நந்தனவனத்திலே படுத்து நித்திரை செய்வதறிவையே: ஒரு நாள் அங்ஙனம மெய்ம்மறந் தயர்ந்து நித்திரைசெய்யும் தருணமறிந்து, அந்த ராஜதுரோகியாகிய சகோதரன் அரவமின்றி மெல்லென அடிமேலடி வைத்துக் கட்டிலின் அருகே வந்து நின்று, வச்சநாபி ரசத்தை என் செவித்துவாரத்தில் ஊற்றினன். வச்சநாபி மானிடருயிரை நொடிக்குள் வதைக்கும் படுவிஷம். செவியில் விழவும், அது பாதரசம்போலத் தேகத்தில் உள்ள உதிர நரம்புகள்தோறும் விரைந்தோடி யுதிரத்தைச் சுவறுவித்தது. உதிரம் சுவறவும், நான் குஷ்டரோகிபோலானேன்; எனது உடம்பெல்லாம் வறண்டு, கோடைக்காலத்தில் நீர் வற்றிய குளத்தின் அடித்தரை முகம் கமர்வெடிப்பதுபோலக் காண்பவர் ஏங்கித் திகைக்கக் கீற்றுக் கீற்றாக வெடித்தது. தீங்கு வருமெனும் சிந்தனையின்றிச் சிங்காரவனத்தில் பட்டப்பகலிலே படுத்து அயர்ந்து தூங்குகையில், என்னுடன் பிறந்த அந்தப் பாதகன், சிரசில் தரித்துச் செங்கோல் செலுத்தும் எனது கிரீடம், என்னிரு கண்மணியினும் அரிய தாரம், இவ்வுலகில் எவ்வகைச் செல்வத்தையும் பெற்றனுபவித்தற்கு ஆதாரமாகிய ஜீவன் இம்மூன்றையும் ஏககாலத்தில் அபகரித்தான். மகனே, உன்மேல் ஆணையிட்டு ஒன்று சொல்லுகிறேன்: உனக்கு உன் தந்தையினிடத்து உருக்கமுள்ளது உண்மையாயின், உன் தந்தையைக் கபடமாய்க் கொன்ற கிராதகனை நீ எவ்விதத்திலேனும் கொன்று பழி வாங்காதிராய். நான் உயிர் வாழ்ந்திருக்கையிலேயே உன் தாய் நெறி தவறிக் கற்பழிந்து, என்னைக் கொன்ற கொலைபாதகனை மனமொப்பி மணம் புரிந்திருப்பதை நினைக்க நினைக்க என் மனம் நெருப்புப்பற்றி எரிகின்றது. போனது போகட்டும், நீ பதைக்கவேண்டாம். என்னைக் கொன்ற கொடியனாகிய உன் சிற்றப்பன் உயிரை வதைத்து க்ஷாத்திரம் சாதிக்க உன்னால் ஆகும் எத்தனங்கள் அனைத்தும் செய்யலாம். அவனைப்பற்றி நீ யாது

செய்யினும் எனக்குச் சம்மதமே; உன் தாய் விஷயத்தில் மாத்திரம் ஒரு தீங்கும் செய்யாதே; அவளைத் தெய்வம் கேட்கும்; அன்றி யும் பிறர் அவளுக்குச் சிக்ஷை செய்யவேண்டுவதேன்? கொடுக்கி னுற் கொட்டி ஜீவராசிகளை வருத்தும் கொடுவிஷமுள்ள தேள் போலும், கூர்முனையால் தைத்துத் தசையைக் கிழிக்கும் நெடு முட் போலும் அவளது நெஞ்சமே அவளை அனுதினம் வருத்தும் என எச்சரித்தது. அனுவளவும் தவருமல் அங்ஙனமே நடப்ப தாக ஹாம்லெத் உறுதிமொழி கூறவும் அவ்வுருவம் மறைந்து போயிற்று.

பின்னர் ஹாம்லெத் அங்கு தனியே நிற்கையில், அவ்வுருவம் மொழிந்த மொழிகளை நன்கு நினைந்து, "இந்த நிமிஷமுதல் எனது தந்தையின் வடிவம் எனக்குச் சொன்ன சொல்லும், கற்பித்த கற்பனையும் தவிர, மற்றெதுவும் என் உள்ளத்தில் குடிகொள்ளா திருக்கக்கடவது. யானிதுவரை கண்டும் கேட்டும் கற்றும் அறிந்துகொண்ட விஷயங்கள் யாவையும் உடனே மறந்துபோகக் கடவன" எனத் தனது உள்ளத்தில் உறுதிகொண்டான். தனக் கும் தந்தையுருவத்திற்கும் நடந்த சம்பாஷணை வரலாறுகளைத் தன் பிராணபதமான தோழன் ஹொரேஷியோ ஒருவனுக்கன்றி, ஹாம்லெத் இவ்வுலகில் மற்றெவருக்கும் அறிக்கை செய்யவில்லை. அன்றிரவு கண்ட காட்சியை அவரவர் உள்ளத்தில் அந்தரங்கமாய் வைத்திருக்கவேண்டுமென்று அவன் ஹொரேஷியோவுக்கும் மார்செல்லூவுக்கும் வற்புறுத்தினன்.

முன்னமே தந்தை இறந்ததுபற்றி உள்ளம் நெக்குருகி உடல் மெலிந்திருந்த ஹாம்லெத் அவ்வுருவத்தைக் கண்டபின், அவன் மனம் குன்றிக் குலைகுலைந்தது; அவன் அறிவு மாறிச் சிறிது மூர்க்க குணம் மேலிட்டது. அதுகண்டு அவன் "இந்த விபரீத குணம் நிலை நிற்குமாயின், என் தகப்பன் இறந்தவகையைப் பற்றி எனக்கு விவரம் தெரிந்திருப்பதாகவும், தமக்கு ஏதாயினும் தீங்கு செய்யச் சமயம்பார்த்திருப்பதாகவும் உணர்ந்து என் சிறியதந்தை தமக்கு ஒரு தீங்கும் நேரிடாவண்ணம் வெகு ஜாக்கிரதையாக

நடந்துகொள்வார்; ஆதலின் இங்ஙனமிருக்க வொண்ணாது. பித்த னென்று கபடஜாலம் செய்து திரிவேனாயின், அவர் சந்தேகம் தெளியும்; என்னாலே தீங்கு ஒன்றும் தமக்கு நேரிடாதென்று அவர் மனம் தேறுவார்; நான் மனம் சலித்துத் துடித்து வருந்துவது எவருக்கும் தோன்றாமல் அந்தரங்கமாயிருக்கும்'' என ஹாம்லெத் தனக்குள்ளே தீர்க்கயோஜனை செய்து, அன்றுமுதல் காணும் எவரும் இவன் பித்தம்பிடித்தவன் என்றெண்ணும்படி நடக்கச் சங்கற்பித்தான்.

அன்று தொடங்கி ஹாம்லெத் தரித்த வஸ்திரம் விகாரம், பேசின பேச்சு விகாரம், செய்த செய்கைகள் விகாரம், நடந்த நடக்கை விகாரம், யாவும் விகாரமாயிருந்தன. அவன் நடிக்கக் கருதிய நடனத்தை அணுவளவுந் தவறாது நடித்தான். அரசனும் அரசியும் இளைஞனைப் பித்தனென்றே நம்பினார்கள். பிதா இறந்த துயரத்தின் மிகுதியால் இவ்வகை விபரீதமான குணம் குறிகள்தோன்றலாகுமென்று அவர்கள் கனவினும் கருதவில்லை.— தந்தை உருவம் தோன்றிய வரலாற்றைச் சிறிதும் அறியாத அவர்களுக்கு இவ்வெண்ணம் உண்டாவதற்கு நிமித்தம் இல்லையே.—அவனுக்கு வந்த வியாதி பெண்ணாசை மயக்கமென்று அவர்கள் ஊகித்து அவன் உள்ளத்தைக் கவர்ந்த சிறந்த உரு அமைந்த பெண் இன்னாளென்று உத்தேசித்தார்கள்.

மேற்சொல்லியவாறு ஹாம்லெத்துக்குத் தீராத்துயரம் நேரிடுதற்குமுன், அவன் மிகுந்த சவுந்தரியமுள்ள சிறுமி ஒருத்தியைத் தன் உயிரினுமருமையாக எண்ணி, அவள்மீது ஆசை கூர்ந்திருந்தான். அவ்வழகி அரசனுடைய முதன் மந்திரியாகிய பொலோனியூவின் மகள்; அவள் பெயர் ஒபீலியா. ஹாம்லெத் அழகிற் சிறந்த பவழக்கொடியாகிய அவ்வணங்கினுக்கு இனிய கடிதங்கள் எழுதியனுப்பி இருந்தான்; என்றும் அழியாத அன்பு தம்மிருவருக்கும் உள்ளதென்பதற்கு அறிகுறியாகக் கணையாழிகள் கொடுத்திருந்தான்; அன்றியும் தனக்கு அவள்மீதுள்ள அன்பு மெய்யன்பு என்பதைப் பலவாறு விளக்கியிருந்தான்; தென்றலு

பங்கமின்றி அரசர் முறைமைப்படி அவளைத் தனக்கு மணமாலை சூட்டும்படி கேட்டு உடன்படுத்தியிருந்தான். பின்னிட்டு விதி வசமாக நேரிட்ட துன்பத்தினால் அவன் துக்கசாகரத்தில் மூழ்கவும், தன் பிராணபதமாகிய மந்திரி குமாரத்தியை மறந்தான். அதன்பின் போலிப்பித்தனாக நாள்கழிக்க அவன் என்று நினைத்தானோ, அன்றுதொட்டு அவளைக் கண்டால், அறியாதவன்போலும், அநாதரிப்பவன் போலும் நடந்தான்.

ராஜகுமாரன் இங்ஙனம் அலக்ஷியமாக நடந்து வருகையிலும், குலமாதர்க்குரிய உத்தம குணத்தாற் சிறந்த மந்திரி குமாரத்தி அவனை இரண்டகவாதியென்று நிந்திக்கவில்லை; பின்னிட்டுத் தன்னை அவன் சற்று அவமதிக்கலானதற்கு நிமித்தம், அவனுக்கு உண்டான மனத்துன்பமே தவிர மற்றொன்றுமல்ல; தன் விஷயத்தில் அவன் ஒருபோதும் மனது மாறுபடுகின்றவனல்லனெனத் தேறினாள். அன்றியும் செவிக்கினிய நாதமுள்ள சிறந்த மணிகள் கையறியாதவன் நேர்ந்தபடி முறைதவறி அடிப்பதனால் கேட்க வழங்காத கொடிய நாதத்தைக் கொடுப்பதுபோல, நற்குணங்கள் அமைந்த நிமலனாகிய இளவரசனது பேரறிவும் பெருந்தன்மையும் அவனுள்ளத்திற் குடிகொண்ட கொடுந்துயரத்தினால் சீர்கெட்டு மாறுபட்டுப்போயின என்று அவள் எண்ணினாள்.

பிதாவைக் கொன்ற சிறியதந்தையைக் கொன்று, தன் சபதத்தை முடிக்கும் கொடுந்தொழிற்குரிய உபாயத்தை இராப் பகல் எண்ணியவண்ணமாயிருந்த ராஜகுமாரனுக்கு மேற்கூறிய மந்திரி மகளை இதஞ்சொல்லி உபசரிக்கும் உல்லாசம் ஏற்குமா? பெண்ணாசை கூர அவன் மனம் இணங்குமா? பெண்ணாசை வினையொழிந்திருக்கும் வீணர்க்குரிய பயனற்ற விநோதமென்று அவன் எண்ணத்திற் பட்டது. இவ்வாறு அவன் சிந்தை பழி தீர்க்கும் துணிவில் அழுந்தியிருந்தும், ஒப்பற்ற ரூபவதியாகிய ஒபீலியாவின் மீதுள்ள அன்பைவிளக்கும் மனவுருக்கமான நினைவு இடைக்கிடை அவனுக்கு உண்டாகாதிருக்கவில்லை. தன்னிடத்து உள்ள முருகிய உத்தமியைத் தான் இங்ஙனம் அவமதிப்பதற்குச் சிறிதும்

நிமித்தமில்லையெனவுணர்ந்து சிந்தை தடுமாறி இளவரசன் ஒரு முறை அவளுக்கொரு கடிதம் எழுதினான். அதில் விவேகவசம் தப்பி ஆசை மீறுவோர்க்குரிய வாக்கியங்கள் சில இருந்தன. அதனால், அவன் உன்மத்தனென்று நாலு பெயரும் உத்தேசிப்பது பொருந்துமெனவும், அன்பை ஒருவாறு குறிப்பிக்கும் இரண்டொரு இதவாக்கியங்கள் இருந்ததனால், தன்மீதுள்ள அன்பு ஆழ்ந்து அவன் அகத்தில் அழுந்தியதெனவும் அந்தச் செல்வி நினைத்தாள். அவன் எழுதிய கடிதத்தில் வரம்பு கடந்து வற்புறுத்தும் வாக்கியங்கள் பல இருந்தன. அவற்றில் இரண்டொரு விஷயத்தை யடியிற் காட்டுகிறோம் :—"இராக்காலத்தில் எண்ணிறந்த தீபங்கள்போல விண்ணிற் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்கள் ஒளி மழுங்கி இருளினும் இருளும்; காலையில் கிழக்கே உதித்து, மாலையில் மேற்கே அஸ்தமிக்கும் பகலவனாகிய சூரியன் அசலமாக ஓரிடத்தில் நிற்பினும் நிற்கும்; எவருக்கும் பிரத்தியக்ஷமாகத் தோன்றும் சத்தியம் அசத்தியமாகப் புரளினும் புரளும்; உன்மீது எனக்குள்ள அன்போ, ஒருபொழுதும் அழியாது. இது உறுதியென்றறி" என்னும் கருத்துள்ள வாக்கியங்களை எழுதியனுப்பினான். முறைமைப்படி மந்திரி மகள் இந்தக் கடிதத்தைத் தந்தைக்குக் காட்ட, அவன் அதை வெளியிடாதிருப்பது தகாதென்று எண்ணி, அரசனுக்கும் அரசிக்கும் அறிக்கைசெய்தான். அன்று தொட்டு அவர்கள் இருவரும் ஹாம்லெத் உன்மத்தனானதற்கு நிமித்தம் பெண்ணாசையென்றே உறுதியாக நம்பினார்கள். ஒபீலியாவின் ரூபலாவண்ணியங்களைக் கண்டு மயங்கி அவன் புத்தி மாறுபட்டதனால் அச்சமில்லையென்றும், இனி அவளது நற்குண நற்செய்கைகளைக் கண்டு அவன் மயக்கம் தெளிய, இருவரும் கௌரவமாக வாழ்ந்திருப்பார்களென்றும் எண்ணி அரசி பரிவு கூர்ந்தாள்.

ஹாம்லெத்துக்கு வந்த வியாதியோ, அவள் நினைத்தபடி அற்பமான வியாதியல்ல; ஆழ்ந்து வேரூன்றிய அசாத்திய ரோகம், அவன் தான் கண்ட தந்தையின்வடிவத்தை மறக்கவில்லை, அது ஓயாது அவன் உள்ளத்தில் உலாவியது. தன்னைக் கொன்றவனைக் கொன்று பகைதீர்க்கத் தந்தை கற்பித்த கற்பனைப்படி செய்து

தீர்க்குமளவும் அவன் மனம் பொறுத்திருக்கவில்லை, பதைத்தது. நினைத்த காரியத்தை உடனே செய்து முடிக்காமல் ஆலசியஞ் செய்வது பிதிர்த்துரோகமென்றும், தந்தை சொல்லைத் தள்ளும் அக்கிரமமென்றும் அவன் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கினன். இடையறாமல் எப்பொழுதும் மெய்க் காவல்வீரர் சூழ்ந்திருக்கும் அரசனைக் கொல்வதோ எளிதல்ல; ஒருகால் எளிதாயிருப்பினும், ராணி ஹாம்லெத்தின் தாய் அரசன்சமுகத்தை விட்டு நீங்காதிருந்தது அவன் எண்ணத்தை முடிப்பதற்குப் பலமான தடை. இந்தத் தடையை ஊடறுத்துச் செல்வது அசாத்தியம். மேலும், கிரீடத்தை உரிமையின்றிக் கவர்ந்த துரோகி அன்னியனல்லன்; அவன் தாயின் கணவன். இதை எண்ணவும், அவன் மனம் துன்புற்றது; அவன் செய்த பிரதிக்கினையின் முனை மடிந்தது. ஹாம்லெத்தின் நெஞ்சு இளநெஞ்சு; ஜீவவதை செய்வதை நினைக்க, அவன் உள்ளம் பதை பதைத்துத் திகைத்தது. அன்றியும், நெடுநாளாக உள்ளத்தில் துக்கம் குடிகொண்டு துணிவு அழிந்ததனால், அவன் சித்தம் ஒரு வழியில் உறுதிகொள்ளவில்லை; ஓயாமல் சஞ்சலித்தது; ஆகவே, நினைத்த கருமத்தை முடிக்கும் துணிவில்லாமையாற் பலநாள் கழிந்தன. அல்லாமலும், தான் கண்ட உருவம் அவ்வாறு வடிவெடுத்து வந்த தந்தையேயெனவும், துக்கத்தில் மூழ்கி அறிவு தடுமாறியிருக்கும் தன்னைக் கொலை செய்யத் தூண்டிவிட்டுக் கூத்துப் பார்க்கத் தந்தை வடிவு தாங்கி வந்த பிசாசமெனவும் விவரம் தெரியாமல், அவன் ஐயமுற்று வருந்தினன். பின்பு அவன் தன் கண்ணுக்குத் தோற்றியது மாயைத் தோற்றமாக இருந்தாலும் இருக்கலாமெனவெண்ணி நினைத்த காரியத்தைக் கைசோரவிடாமல் முடிப்பதற்கு மயக்கமற ஏதாயினும் திருஷ்டாந்தம் விளங்கவேண்டுமென்று சற்றுப் பொறுத்திருக்கத் தீர்மானித்தான்.

காரியமுடிக்குந் துணிவின்றி அவன் இவ்வாறு மனம் தடுமாறியிருக்கையில், ஒரு நாள் அரண்மனைக்குக் கூத்தாடிகள் சிலர் வந்தனர். அதற்கு முன்னும் அவர்கள் அரண்மனைக்கு வந்து நாடகக் கூத்தாடியதுண்டு. விருத்தனாகிய ட்ராய்வேந்தன் ப்ரயம்

என்பவன் இறந்ததையும், அவன் பத்தினி ஹெக்யூபா துக்கங் கொண்டாடியதையும் விளக்கிய துயர் தரும் கதையை அப்பொழுது அவர்களில் ஒருவன் அபிநயித்துச் சொல்ல, ஹாம்லெத் மிகப் பிரீதியாய்க் கேட்டிருந்தான். அறிமுகமாயிருந்ததனால், இப் பொழுது அக்கூத்தாடிகளைக் கண்டவுடன் ஹாம்லெத் நல்வார்த்தை சொல்லி, முன்பு தான் கேட்டுக் களிகூர்ந்த கதையை மறுபடி அபிநயித்துச் சொல்லவேண்டினான். உடனே அவ்வாட்டக்காரன் பலம் குன்றிய அக்கிழவரசன் குரூரவதை செய்யப்பட்டதையும் அவன் குடிகளும் நகரமும் அக்கினிக்கு இரையானதையும், பருவ முதிர்ந்து உடல் மெலிவுற்ற ராஜபத்தினி தன் நாயகன் இறந்த துயரத்தால் அறிவு மாறுபட்டு, கிரீடம் தரித்த சிரசில் கந்தையும் சிறந்த நவரத்தினங்கள் இழைத்த தங்கச்சரிகைப்பட்டாடை தரித்த இடையில் கம்பளிப் புடைவையும் அலங்கோலமாய்ச் சுற்றிக் கொண்டு, மலரினும் மிருதுவான அடி வருந்தப் பாதரக்ஷையின்றி அரண்மனை மேன்மாடத்திற்கும் கீழ்மாடத்திற்கும் ஓயாமல் பதைத்துத் துடித்து ஓடித்திரிந்ததையும், கண்ணுக்கெதிரில் காண்பது போல வர்ணித்துக்கூறினான். அவனது வாய்ப்பிறப்பைக் கேட்டவரனைவருள்ளமும் கரைந்துருகக் கண்ணருவி பெருகியது. பல முறை பற்பல விடங்களில் அபிநயித்து வழக்கப்பட்டிருந்த அக் கூத்தாடியும் அரண்மனையில் இக்கதை சொல்லும்பொழுது, மெய்ம்மறந்து மனமுருகி நாக்குழறி அழுது கண்ணீர் பெருக்கினன். அதுகண்டு ஹாம்லெத் "இந்தக் கூத்தாடி பாடியாடியது நாடகமேயன்றி கண்ணெதிரில் கண்ட காட்சியல்ல; அதில் பிராணவதைசெய்யப்பட்ட அரசனையாயினும் அரசியையாயினும் இவன் ஒருபொழுதும் கண்டவனல்லன்; அவர்கள் இறந்து பல நூறு வருஷகாலம் சென்றது; தான் அறியாதவர்களைப்பற்றி எவரோ எழுதிவைத்த நாடகத்தை நாலுபெயர் கேட்கச் சும்மா பிரசங்கம் செய்யும்பொழுது இவன் மனம் பதைத்து வருந்திப் புண்பட்டுக் கண்ணீர் சுரந்து பெருகியது. இந்த ராஜ்யத்தில் செங்கோல் செலுத்தி எட்டுத்திசையிலும் நல்லிசை நாட்டிய என் தகப்பனைத் துடிக்கப் பதைக்க நஞ்சிட்டுக்கொன்ற பாதகன் இன்

ஞனென அறிந்திருந்தும், அவனை நிர்த்தூளியாக்கவல்ல வஞ்சினம்
என் உள்ளத்தில் மூண்டு எரிந்தெரிய நிமித்தம் இருந்தும், நான்
சூத்திரத்தை மறந்து விசாரமற்றிருக்கிறேனே, என் மனம்
பதைப்பற்றுப் பொறுத்திருக்கின்றதே, ஆ ஆ! இதென்ன ஆச்சரி
யம்!!" எனத் தனக்குள்ளே நினைத்துத் தவித்தான். நடிப்போரை
யும், நடனத்தையும், நல்ல நாடகங் கேட்பதனால் கேட்போர் மனம்
அதன் துறையில் இறங்கி அநுதபிப்பதையும் பற்றி நினைத்த
பொழுது ஒரு கதை அவன் ஞாபகத்தில் வந்தது: அதாவது,—
ஒரு தேசத்தில் ஆட்டக்காரன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு
நாள் எவரும் அறியாமல் ஒரு மனிதனைக் கொலை செய்தான்.
அந்தத் துரோகி இன்னானென நெடுநாள் வெளிப்படவில்லை. பின்பு
ஒரு நாள் அந்தக் கொலைஞன் ஓரிடத்தில் நடனஞ்செய்யும்
பொழுது, நாடகசாலைக்குள் ஒரு கொலைத்தொழில் நடந்தது.
அக்கொடியசெய்கையைக்கண்டவுடன், தான் முன்பு செய்தகொலை
அன்று நடந்ததுபோல் அவன் மனக்கண்ணுக்கு எதிரே நின்றது.
அவ்விரண்டு கொலைகளின் சங்கதிகளும் அணுவளவும் பேதமின்றி
ஒத்திருந்தமையால் அவன் மனம் பரிதபித்தது; அந்நாள்வரையில்
அடக்கியிருந்த அந்தரங்கத்தை அடக்கும் திறமின்றி, இன்னானைக்
கொலைசெய்தவன் யானேயெனப் பலரும் அறிய நாடகசாலையில்
நின்று கூறினனென்பதாம். உடனே ஹாம்லெத், "நல்லது, இக்
கதை இச்சமயத்தில் எனது ஞாபகத்தில் வந்தது எனக்குப் புத்தி
புகட்டவென்று எண்ணுகிறேன். என் தகப்பன் கொலையுண்டு 2
இறந்ததற்கு ஒப்ப, இவர்கள் ஒரு நாடகம் பாடி எனது சிறிய
தந்தை சமுகத்தில் நடிப்பார்களாயின், அப்பொழுது அவர்முகத்
தில் என்ன குணம் குறிகள் தோன்றுகின்றனவெனக் கருத்
துப் பொருத்திப் பார்த்திருப்பேன். பார்த்துக் கொலைசெய்தவர்
இவர் தாம் என்பதற்கும் அல்லவென்பதற்கும் உறுதி தெரிந்து
கொள்வேன்" என யோசித்து, மேற்கூறிய கூத்தாடிகளைக்
கொண்டு ஒருநாடகம் பாடுவித்தான். அதனை அரங்கேற்றுவிக்கும்
தினத்தில் அவன் அரசனையும் அரசியையும் அந்தச் சபைக்கு
வரவழைத்தான்.

அவர்கள் இயற்றிய நாடகம் வியனாநகரத்தில் டியூக் பிரபு ஒருவன் கொலைசெய்யப்பட்ட கதையைப்பற்றியது. அந்தப் பிரபுவின் பெயர் கன்ஜாகோ. அவன் மனையாட்டியின்பெயர் பப்டிஸ்டா. டியூக் பிரபுவின் நெருங்கிய உறவினனாகிய லூஷியானு என்பவன் பொருளை அபகரிக்கும்பொருட்டுச் சிங்காரவனத்தில் பிரபுவை நஞ்சிட்டுக் கொன்றதும், அடுத்துச் சில தினத்தில் பிரபுவின் பட்டமகிஷியைத் தனது நாயகியாக்கிக்கொண்டதும் ஆகிய வரலாறுகள் அந்த நாடகத்தில் வர்ணிக்கப்பட்டன.

தம்மை அகப்படுத்த ஹாம்லெத் வலையிட்டிருப்பதையறியாத அரசனும் அரசியும், மந்திரி முதலிய அரண்மனையாருடன் நடனசாலைக்குச் சென்றார்கள். அரசனது முகக்குறியைக் கருத்தாய்க் கண்டறிய ஹாம்லெத் அருகில் உட்கார்ந்தான். நடனகால க்ஷேபம் துவக்கமாகியது. முதலில் கன்ஜாகோ வெனுமரசனுக்கும் ராணிக்கும் சம்பாஷணை நடந்தது. அதில் ராணி பிராண நாயகன்மீதுள்ள அன்பை வற்புறுத்தி வெளியிட்டாள். தன் நாயகன் இறந்து தான் விதவையாகச் சம்பவித்தால், மறுமணம் செய்வதில்லையென்று உறுதிமொழி கூறினாள். புனர்விவாகம் செய்துகொண்டால் பதிவிரத்தியம் தவறிய படுநீலியாவேனெனத் தன்னைத் தானே திட்டிக்கொண்டனள். அன்றியும், கொண்ட கணவனைப் பிராணவதை செய்யும் பாபிகளன்றி, மற்றொருவரும் புனர்விவாகம் செய்யக்கண்டதில்லையென்று சாதித்தாள். நடனத்தில் இந்தக் குறிப்பைக் கேட்டவுடன், சிறிய தந்தை முகம் சற்று விகாரப்பட்டதையும், கன்ஜாகோவின் மனைவி சொன்ன சொற்கள் தந்தைதாய் இருவருக்கும் கரும்புபோலத் தித்தியாமல், வேம்புபோலக் கசப்பாயிருந்ததையும் ஹாம்லெத் மயக்கமறக்கண்டனன். பின்பு சிங்காரவனத்தில் நித்திரைசெய்த கன்ஜாகோவை லூஷியானு நஞ்சிட்டுக் கொல்லப்போன வரலாறுகள் அபிநயிக்கப்பட்டன. ஹாம்லெத்தின் சிறிய தந்தை தன் சகோதரனாகிய அரசனை நந்தவனத்தே நித்திரை செய்யுமமயத்தில் நஞ்சிட்டுக்கொன்ற கதையும் இக்கதையும் ஒத்திருந்தமையால், அவன் செய்த துரோகம் அப்பொழுது அவன் நெஞ்சைக் கூரெழுத்தாணி

கொண்டு குத்துவதுபோலக் குத்தி வருத்தியது. அப்புறம் அங்கு நின்று நடனம்பார்க்க அவனால் ஆகவில்லை. சடிதியில் தீவட்டி கொண்டுவரக் கட்டளையிட்டு, ஏதோ அசௌக்கியம் உண்டானதாக நடித்து நடனசாலையை விட்டு நீங்கி, அவன் பள்ளிகொள்ளும் மண்டபத்திற்குப் போயினன். அசௌக்கியம் அவனுக்கு உண்மையாக உண்டாயிருப்பினும் இருக்கும். அரசன் எழுந்து போய்விட்டதனால் நடனம் அம்மட்டில் நிறுத்தப்பட்டது. தந்தையுருவத்தினது வாய்ப்பிறப்பு முற்றும் மெய்யானதென்று ஹாம்லெத் நம்புவதற்கு அரசனது முகக்குறியும் செய்கையும் போதுமான திருஷ்டாந்தங்களாயின. பரம சந்தேகத்திற்கு ஆளாகி வருந்துவோனுக்குச் சடிதியில் அச்சமுபாயம் தெளிந்து மனம் தேறுமாயின், மிகுந்த களிப்பு உண்டாவது இயற்கை; அவ்வண்ணமே ஹாம்லெத்துக்கு உண்டாயிருந்த ஐயம் நீங்கி, தந்தையைக் கொன்றவன் சிறிய தந்தையேயென்னும் எண்ணம் உறுதிப்படவும், நொடிப்பொழுதில் சொல்வதற்கரிய உற்சாகமும் மகிழ்ச்சியும் அவன் உள்ளத்திலுதித்தன. தந்தையின் மாயாரூபம் மொழிந்த மொழி ஆயிரங்கோடி வராகன் விலைபெறுமென்று அவன் ஹொரேஷியோவுக்கு உறுதிமொழி கூறினன். தந்தையைக் கொன்ற கொலைப்பாதகன் சிறிய தந்தையென்று ஐயமற அறிந்ததனால், கொலைக்குக் கொலைசெய்து பழிதீர்க்கும் உபாயத்தைச் சூழ்ந்தறியத் தீர்மானித்தான். ஏற்கும் உபாயம் ஏதென்று அவன் எண்ணத்தொடங்குமுன், அவனைப் பெற்றவளாகிய அரசி அந்தப்புரத்திற்கு அந்தரங்க சம்பாஷணை செய்யும்பொருட்டு அவனை வரவழைத்தனள்.

சிலநாளைக்குமுன் உண்டாகிய ஹாம்லெத்தின் விபரீதமான நடக்கையால் அரசனுக்கும் அரசிக்கும் மிகுந்த வியசனம் உண்டாயிற்றென்று ஹாம்லெத்தை அந்தரங்கத்தில் அழைத்துச் சொல்ல அரசன் அரசிக்குக் கற்பித்தான். அங்ஙனமே அவள் ஹாம்லெத்தை அந்தப்புரத்திற்கு அழைத்தபொழுது, அந்தரங்கத்தில் நடக்கும் சம்பாஷணையை அரசன் சாங்கோபாங்கமாய் அறிய விரும்பினன். பெற்றதாய் பக்ஷபாதமாய் ஹாம்லெத்தின் வாய்ப்

பிறப்பில் எதையாயினும் மறைத்துக்கொள்வாளென ஐயமுற்று, சம்பாஷணைமுழுதையும் தவறுமற் கேட்டு அறிக்கைசெய்யப் பருவ முதிர்ந்த மந்திரியாகிய பொலோனியூவை அழைத்து அரசன், அவ்வந்தப்புரத்தில் உள்ள திரைமறைவில் அரவமின்றி ஒளித் திருந்து உற்றுக்கேட்கக் கற்பித்தான். மந்திரி பதிவிருந்த இடம் தன்னை எவரும் காணாதிருக்கவும், ராணிக்கும் மைந்தனுக்கும் நடக்கும் சம்பாஷணையை உள்ளபடி கேட்கவும் வாய்த்த இடம். பொலோனியூ அரசர்க்குரிய சதுர்வித உபாயங்களில் வெகுகாலம் பயின்று முதிர்ந்தவன்; அந்தரங்கமான சங்கதிகளைத் தந்திரமாக வும் சூதாகவும் அறியும் அபேக்ஷையுள்ளவன்; ஆதலின், அரசன் இட்ட கட்டளையை ஏற்குமாறு நிறைவேற்ற அவனிலும் அருந் திறமுடையோர் வேறில்லை.

ஹாம்லெத் தாய் சொற்றவறாது அந்தப்புரம் சேர்ந்தவுடன், அவள் அச்சிறுவனை நோக்கி, "மகனே, உனக்கு இந்த விபரீத குணமும் நடையும் வந்த காரணம் ஏது? உன் தந்தைக்கும் எனக்கும் நீ செய்த நிந்தை மிகுதி" என்று கூறிக் கண்டித் தாள். (தந்தையென்று அவள் சொல்லியது அவனது சிற்றப்பனை; தான் மறுமணஞ்செய்துகொண்ட காரணத்தால் அங்ஙனங் கூறி னள்.) தந்தை என்னும் மொழி சாமானியமானதல்ல, மிகவும் அருமையானது! மிக்க மேம்பாடுள்ளது!! குரங்கின் கழுத்தில் மாலைசூட்டுவதுபோலும், குப்பைவாரும் துடைப்பத்திற்குக் குஞ் சங்கட்டித் தொங்கவிடுவதுபோலும், கண்ணுக்குக் கண்ணான தன் அரிய பிதாவைக் கொன்ற பரம துரோகிக்கு இந்தப்பெயரை எண்ணமின்றிச் சூட்டியதுபற்றி ஹாம்லெத்துக்குத் தாய்மேல் மூண்ட கோபத்திற்கு அளவில்லை. அவள் நெஞ்சைப் பிளக்கத் தக்க அம்புபோலும் கூர்மையுள்ள சொற்றொடர் அமைய அவன் "அம்மா என் தகப்பனுக்கு மிகு மனக்குறை நீங்களே வருவித் தீர்கள்" என மறுமொழி பகர்ந்தான். ராணி இது பதர்ப்பேச்சு என்றாள். ஹாம்லெத், "கேட்ட கேள்விக்கு ஏற்கும் உத்தரம் இது" என்றான். அப்பொழுது மஹாராணி மனம் நொந்து, "மைந்தா, நீ யாருடன் இப்படி முறைதவறிப் பேசுகிறாய்? நீ

என்னை மறந்தனையோ?" என்று வினவ, ஹாம்லெத், "ஐயையோ! அங்ஙனம் மறப்பேனாயின், எனது பாக்கியமே; இந்தப் பாழ்மனம் மறக்கவில்லையே; நீங்கள் மஹாராஜாவுக்கு மணமாலை சூட்டிய பெருமாட்டி; கொண்டகணவர் இறக்க, கொழுந்தனுக்கு மனைவியான சோமாட்டி; என்னைப்பெற்ற சீமாட்டி; உங்களுக்கும் எனக்கும் இந்த முறைமை இல்லாதிருக்கப் பெற்றேனில்லையே" என மறுமொழி கூறினான். இவ்வார்த்தையைக் கேட்டவுடன் அரசி, "உனக்கு இந்த விபரீதமோ வந்தது? நல்லது, இங்ஙனம் என்னை அவமதித்து வாய்திறவாதிருக்கச் செய்வாயானால், உனக்கு எதிர் வார்த்தை சொல்லி, உன் வாய்மதம் அடக்கத்தக்கவர்களை உன்னிடத்திற்கு அனுப்புவேன்; உன் சாதுரிய சாமர்த்தியத்தை இருந்தறிவோம்" எனச் சினந்துரைத்து, அரசனையாயினும் அமைச்சனையாயினும் அனுப்ப நினைத்துப் போக எத்தனித்தாள். ஹாம்லெத் தாயை ஒரு அடிகூட எடுத்து வைக்க விடவில்லை. அந்தப்புரத்தில் தனித்திருந்ததனால், அவள் செய்த அக்கிரமங்களைத் தன்னால் ஆகும் சாதுரிய சாதனங்கள் அனைத்தாலும் அவளுக்குத் தெரியக்காட்டி நற்புத்தி வருவிக்க நினைத்து, அவளைக் கைப்பிடித்திழுத்துப் பலாத்காரமாய் உட்காருவித்தான். இவ்வாறு தன் மகன் பிடிவாதம் செய்வது கண்டு ராணிக்கு மிகு திகில் உண்டாயிற்று. உன்மத்தனாகிய அவன் பிராணபாயமான தீங்கு ஏதேனும் செய்யினும் செய்வானென வெண்ணி, அவள் நடுநடுங்கிப் பதைத்து ஓலமிட்டாள். உடனே திரைமறைவிலிருந்து எவரோ "பொறு! பொறு!! பட்டமகிஷிக்குத் தீங்கொன்றும் செய்யத்துணியாதே!" என விரைந்துரக்கச் சொல்லும் சத்தம் கேட்டது. கேட்கவும், திரைமறைவில் இருப்பவன் அரசனென்று உறுதியாக நம்பி, ஹாம்லெத் கடுஞ்சினத் தீமூண்டெரியக் கத்தியை உருவி அரவம் கேட்ட இடத்தை நோக்கி, ஓடும் எலியைத் தொடர்ந்து குத்துவதுபோல், அடுத்தடுத்துப் பலமுறை குத்தினான். அப்புறம் அந்தச் சத்தம் கேட்கவில்லை. அதனால், குத்துண்டவன் இறந்தானென மனம் தேறித் திரையை நீக்கிப் பிரேதத்தைப் பிடித்திழுத்துப் பார்த்தான்; குத்துண்டு

இறந்தவன் அரசனல்லன். பொலோனியூ, ஒட்டுக்கேட்கத் திரை மறைவில் அரவமின்றி உட்கார்ந்த ஆசாரக்கள்ளனாகிய கிழமந்திரியின் பிரேதத்தைக் காணவும், ராணி: "அடா பாவி! சிறிதாயினும் சிந்தையின்றிப் படுகொலை புரிந்தாயே! இது என்ன கொடுமை!" என்று கூவினாள்; பதைத்தாள்; துடிதுடித்து நடுங்கினாள்; மனம் வருந்தி அழுதாள். அவள் சொல்லையும், அவள் படும் பாட்டையும் கேட்கவும் பார்க்கவும் ஹாம்லெத்துக்கு மனம் இக்கவில்லை; அதனால் அவன் "என்ன சொன்னீர்கள், எனது அருமைத்தாயே, நான் படுகொலை புரிந்தேனென்றா பகர்ந்தீர்கள்? உங்களை மணம்புரிந்த மன்னவனைக் கொன்று, அவருடன் பிறந்த ஒருவருக்கு மனைவியாக உடன்பட்ட படுகொலைக்கு நான் செய்த இக்கொலை எம்மாத்திரம்?" என்று உக்கிரத்துடன் உரைத்தான். அவன் இம்மட்டில் விட்டுவிடவில்லை; அந்நாள்வரையில் அந்தரங்கமாக வைத்திருந்த சிந்தனைகள் அனைத்தையும் அப்பொழுது தாய்க்குத் தெளியச் சொல்லக் கோபதாபத்தால் அவனுக்குத் துணிவு பிறந்தது. பெற்றோருடைய குற்றம் குறைகளைப் பிள்ளைகள் பாராட்டாமல் கண் சாடையாக விட்டுவிடுவதே முறைமை; ஆனாலும், பெற்ற தாய் பெரிதான அக்கிரமம் செய்தால், மகன் பதைப்பின்றிப் பார்த்திருக்கலாகாது; கண்டித்து எச்சரிக்க வேண்டும். அவ்வாறு சினந்து சுடுசொற் சொல்லி எச்சரிப்பது தாயின் குற்றத்தைத் தூற்றவல்ல, நற்புத்தி வருவித்து, அவளை நல்வழிப்படுத்தவேயாம். சற்குண சிரோமணியாகிய ராஜகுமாரன் தன் தாய் செய்த படுபாதகத்தை அவள் கன்னெஞ்சு மெழுகு போல் கரைந்துருகி வருந்தும்படி உறுப்புறுப்பாய்ப் பின்வருமாறு பகுத்துக் காட்டினான். "அம்மா, சிறியேன் சொல்லும் எளிய சொல்லை மனதிரங்கிக் கேளுங்கள்: இறந்த அரசர் என் பிதா, உங்கள் கணவர். அவர் இறந்து இரண்டு மாதமாவதற்குள் அவர் சகோதரரும் ஊரறிய அவரைக் கொன்ற கொலைஞருமாகிய துரோகியை மணஞ்செய்ய உங்கள் மனம் உடன்பட்டதெப்படி? கன்னிப்பருவத்தில் கைப்பிடித்து உங்களைக் கலியாணஞ்செய்து கொண்ட கணவருக்கு ஒருநாளும் கற்புநிலை தவறுவதில்லை

ஹாம்லெத்.

யென்று வாக்குறுதி செய்த நீங்கள், அவருடன் பிறந்த ஒருவருக்கு முறைதவறி மனைவியானீர்களாயின், இனிப் பெண்பாலார் வாக்குறுதியை அணுவளவேனும் உலகம் நம்புமா? எவர் செய்த குற்றம் குறைகளுக்கும் உலகம் தாரசென்பதை மறந்தீர்களோ? இனி மாதரிடத்தில் விளங்கும் நற்குண நற்செய்கைகள் அனைத்தும் மாயமேயெனவும், வதுவை செய்யும்பொழுது மணமகனுக்கு மணமகள் செய்யும் உடன்படிக்கை சூதாடுவோர் வாக்கினின்றும் பிறக்கும் சத்தியத்திற்குச் சமானமெனவும், அவர்கள் தேவபக்தி இந்திரசாலமெனவும், அவர்கள் செய்யும் பிரார்த்தனை அர்த்தசாரமில்லாத பல சொற்கள் தொடுத்த பாமாலையெனவுமல்லவோ நினைக்க வேண்டியதாகும். எனது அருமைத்தாயே, உங்கள் கொடுமையைக் கண்டு விண்ணோர் வெட்கிக் கண்ணீர் விட்டார்கள்; மண்ணோர் மனம் வெந்து நொந்து மயங்கினார்கள் என்றான். பின்பு ஹாம்லெத் அங்கியுறைக்குள் வைத்திருந்த இறந்த அரசனது படத்தையும், இருந்து அரசாளும் துரோகியின் படத்தையும் எடுத்துக் காட்டி, இவ்விரு படங்களுக்கும் உள்ள தாரதம்மியத்தைப் பாருங்கள்: என் தந்தையின் முகம் எத்தனை களையுள்ளது? எவ்வளவு காந்தியுள்ளது? தங்கமயமாகத் துலங்கும் இம்முகம் விண்ணுலகில் வாழ்வோர் முகத்துக்கு எள்ளளவேனும் இளைக்குமா? சிரசில் சிறு மோதிரவடிவாகச் சுருண்டு மாலைபோலப் படிந்திருக்கும் சிறந்த வரோமமும், வில்லினைப்போல் வளைந்த வறுநெற்றியும், விளக்கொளியொத்துத் துலங்கும் இரு விழிகளும், சிங்கவேற்றுக்குச் சமானமாகிய கெம்பீரமான தோற்றமுமுள்ள இந்த என் தாதை உங்கள் கணவர். அவர் இறக்க, அவருக்குப் பிரதியாக நீங்கள் மனமுவந்து சேர்த்துக்கொண்ட கணவர் முகத்தை இதோ பாருங்கள்: இதுதான் அதிசய சௌந்தரிய முள்ளவராகிய என் தகப்பனைக் கருக்கி வதைத்த கடுந்தீயன் முகம்! இம்முகத்தைக் காணும் எவர் மனமும் தீயும்! உடலும் தீயும்! இதன் நிழல் விழும் பயிர்வகைகள் அனைத்தும் தீயும்!" என்றான். இங்ஙனம் அவன் சொன்ன சொற்கேட்டு, தாய் தன் அகத்தில் உள்ள அந்தரங்கத்தை மகன் உள்ள

படி அறிந்து வெளியிட்டதை எண்ணி வெட்கிப் பயந்து, மரம் போலச் செயலற்றிருந்தாள். கபடமும் சூதும் கெடுமதியும் நிறைந்த அவள் உள்ளம் அவளுக்கு அவலக்ஷணமாகத் தோற்றியது.

பின்பு ஹாம்லெத் "என்னைப் பெற்றுவளர்த்த பெருமாட்டி, தங்கள் முதற் கணவரைக் கொலைசெய்து, அக்கிரமமாய்த் திருடனைப்போல் அவர் கிரீடத்தை அபகரித்த பரமதுரோகிக்கு இன்னும் மனைவியாயிருந்து அவனுடன் கூடி வாழ்வது தங்களுக்குத் திர்ப்தியாகத் தோன்றுகிறதா?" என்று கேட்டான். கேட்கவும், அவன் தந்தையின் போலியுருவம் அந்தப்புரத்தில் சடிதியில் தரிசனமாயிற்று. அது அவன் தந்தையைப்போலவும், சமீபகாலத்தில் காவற்சேவகருக்கும் அவனுக்கும் உயர்தளத்தில் தோன்றிய வடிவுபோலும் இருந்தது. அதனைக் கண்டவுடன், ஹாம்லெத்தின் சரீர உறுப்புகள் அனைத்தும் அச்சத்தின் மிகுதியால் நடுநடுங்கி விடுவிடென்று உதறின. உதறியும், அவன் அச்சத்தைப் பாராட்டாமல், "தாங்கள் இச்சமயத்தில் இவ்விடத்திற்கு வந்த காரணம் ஏது?" என்று வினவ, அவ்வடிவம் "உன் சொற்படி நீ பழிக்குப் பழிவாங்க மறந்திருப்பாயென எண்ணி முன்சொன்ன சொல்லைப் பின்னும் உனக்கு நினைப்பூட்ட வந்தேன்; நீ உன் தாயுடன் இனிப் பேசாதிராதே; பேசாதிருந்தால், அவளை வருத்தும் மிக்க துயரும் திகிலும் அவள் உயிரை வதைக்கும்; இதற்கு ஐயமில்லை" என்று எச்சரித்து மறைந்தது. அந்தப் புரத்தில் தந்தையின் உருவம் ஹாம்லெத் ஒருவனுக்கன்றி, அவன் தாய்க்குத் தோன்றவில்லை. அவன் அதைக் கண்டபொழுது, அது நின்ற இடத்தைக் குறிப்பித்து, இதோ தந்தையினுருவம் வந்து நிற்கின்றது பார்த்தீர்களாவென்று தாய்க்குக் காட்டினான்; அதன் குணம் குறி கோலம் முதலியவைகளைத் தான் கண்டபடி விவரித்துச் சொன்னான். தாய் தன் கண்ணுக்கு ஒன்றும் தோன்றவில்லை என்றாள். அந்தப்புரத்தில் அவள் கண்ணில் ஹாம்லெத் ஒருவனன்றி மற்றெவரும் காணாதிருக்க, ஹாம்லெத்துக்கும் அசரீரிக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டபொழுது, அவள் அத்தியந்தம் திகிலடைந்து நடுநடுங்கி வருந்தினாள். வருந்தியும், அவன்

உன்மத்தனாதலால், அவனுக்கு இந்த விபரீதம் உண்டாயிற்றென்று தனக்குத் தானே சமாதானம் சொல்லி, திகிலை ஒருவாறு தொலைவிக்கப் பார்த்தாள். அப்பொழுது ஹாம்லெத் வாய்திறந்து "அன்னாய், சொல்லக் கேளுங்கள்; பின்னும் ஒரு முறை எனது தந்தையின் உருவத்தைப் பூலோகத்தில் வருவித்தது தாங்கள் செய்த அக்கிரமமே தவிர, மற்றொன்றுமல்ல. பித்தம் தலைக்கேறி ஏதோ ஒரு வடிவத்தைக் கண்டதுபோலப் பாவித்து வீணிற் பிதற்றுகிறானென்றெண்ணி, பாவம் குடிகொண்ட தங்கள் உள்ளத்திற்கு இதஞ்சொல்லித் திருப்தியடைந்திருக்கிறீர்களே; இப்படியிருப்பது தகாது. இதோ என் கையைப் பிடித்துத் தாதுகதி பாருங்கள்; நான் உன்மத்தனானால், நாடி படபடவென்று விரைந்தோடுமே; கைந்நாடி சுகதேகத்திற்கு உரிய குணம் தவறாமல் மத்தியம கதியாக ஓடுவது தங்களுக்குத் தோன்றவில்லையா? தாயே, இளைஞனாயினும், என் புத்தியைத் தள்ளாதிருக்கத் தங்களை இரந்து கேட்கிறேன்: செய்த அக்கிரமத்திற்கு இனி நிவர்த்தியில்லை; அதைப்பற்றி மன நொந்து வருந்தி வாய் திறந்து கடவுளுக்கு அறிக்கை செய்யுங்கள், இன்றுமுதல் இவ்வரசன் உறவைத் தவிர்த்து, இனி அவனுக்கு மனைவியாயிருக்கக் கனவிலும் எண்ணாதிருங்கள்; எனது நிஜமான தந்தையை நினைவுகூர்ந்து, அவர் குலத்திற்கும் கௌரவத்திற்கும் ஏற்க நல்வழிப்படுவீர்களானால், நான் தங்களை எனது அருமைத் தாயென நன்குமதித்து, என்னை வாழ்த்துமாறு வரம் கேட்பேன்" என வணக்கமாக விளம்பினான். அப்பொழுது, அவன் இரு விழிகளினின்றும் கண்ணீரருவி பெருகிற்று. மகன் சொற்படி தவறாமல் நடப்பதாகத் தாய் வாக்களித்தாள். அவ்வளவிற் சம்பாஷணை முடிந்தது.

அதன்பின் அவகாசமுண்டாகவே, சிந்தனையின்றித் தான் கொன்றவன் யாவனென்று ஹாம்லெத் ஆய்ந்தோய்ந்து பார்த்தான்; தன் கைக்கத்திக்கு இரையானவன் தனக்குப் பிராணபதமாகிய ஒபீலியா பெருமாட்டியின் தந்தையான பொலோனியுவென்னும் அமைச்சனென அறிந்து பிரேதத்தைப் பிடித்திழுத்து ஓரொதுக்கில் விட்டு, முன்பு உண்டாயிருந்த பதைப்பும் துடிப்பும்

மூர்க்க வெறியும் அடங்கிவர, தான் செய்த படுகொலையை நினைத்துப் பரிதபித்து அழுதான்.

பொலோனியுவை மேற்சொல்லியவாறு நிர்நிமித்தமாய்க் கொலை செய்ததைச் சாட்டி, அரசன் இதுதான் சமயமென்று ஹாம்லெத்தை ராச்சியத்திற்கு அப்புறம் அகற்றினான். ஹாம்லெத்தின் மூலமாய் நாளடைவில் தனக்கும் பிராணுபாயம் உண்டாகுமென்று அரசன் ஏங்கித் திகைத்தான். ஹாம்லெத்தைப் பிரஜைகள் கண்ணுக்குக் கண்ணாக நேசித்தது அவனுக்குத் தெரியும். அதனால், குடிகளுக்கு அஞ்சி, அவன் ஹாம்லெத்தின் ஜீவனுக்குத் தீங்கொன்றும் செய்யாதொழிந்தான். மற்றப்படி ஹாம்லெத்தைக் கொன்று சுகித்திருப்பது அவனுக்கு இஷ்டமே. அன்றியும், குற்றம் குறைகள் திரளாகச் செய்தவனாயினும், அரசி தான் பெற்ற பிள்ளை தன் உயிரினும் பெரிதென்று பாராட்டி அன்புகூர்ந்ததும் அரசன் அறிவான். இந்த யோஜனைகள் அனைத்தையும் சிந்தையில் வைத்து, வஞ்சகனாகிய அரசன் மந்திரியைக் கொன்ற ஹாம்லெத்தைப் பிராணதண்டனைக்குத் தப்புவிப்பது போலப் பாவனை காட்டி, கப்பலில் ஏற்றுவித்து இங்கிலாந்திற்கு அனுப்பினான். அக்காலத்தில் இங்கிலாந்து டென்மார்க்கு துரைத்தனத்திற்கு அதீனமாயிருந்தது. அங்கிலேய அரசன் டென்மார்க்கு அரசனுக்குத் திறை கொடுத்துவந்தனன். அது நிற்க, ஹாம்லெத்துடன் அரண்மனையார் இருவர் அனுப்பப்பட்டார்கள். அங்கிலேய அரசனுக்கு டென்மார்க்கு அரசன் எழுதி அவர்கள் வசம் அனுப்பிய கடிதத்தில், கப்பலினின்று இறங்கிக் கரைசேர்ந்தவுடன் ஹாம்லெத்துக்கு இன்ன காரணத்தால் பிராண தண்டனை செய்யவேண்டுமென்று விவரம் கண்டிருந்தது. கடிதத்தின் தாற்பரியம் இதுவே. கப்பல் ஏறின நிமிஷம் தொடங்கி ஹாம்லெத்தின் மனம் பதறிப் பதைத்துப் பல நினைவுகளால் வருந்தியது. அரசன் புனைசுருட்டு ஏதேனும் செய்திருப்பானெனவே எண்ணி அவன், இரவில் அரண்மனை உத்தியோகஸ்தர்கள் அயர்ந்து நித்திரை செய்யும்பொழுது, இதுதான் சமயமென்று அவர்கள் வசம் இருந்த அரசன் திருமுகத்தை எடுத்து, அதில் பதிந்த தன்

பெயரை மிகு சாமர்த்தியமாய் அழித்து, அரண்மனையார் இருவர் பெயரையும் பதிவுசெய்து மடித்து, உடைத்த முத்திரையை மீண்டும் ஒட்டி, இருந்த இடத்தில் வைத்துவிட்டு, ஒன்றும் அறியாதவன்போலப் படுத்துத் தூங்கினான். பின்னர் கடற்கள்வர் அக்கலத்தைக் கவரக் கருதி எதிர்ப்பட்டார்கள்: எதிர்ப்படவே, அம்மரக்கலத்தில் இருந்தவர்களுக்கும் கள்வருக்கும் கடற் சண்டை தொடங்கிற்று. அச்சண்டையில் தனது ஆண்மையை விளக்கக் கருதி, ஹாம்லெத் கைக்கொண்ட கத்தி ஒன்றின் துணையொழிய வேறு துணையின்றிச் சத்துருவின் கப்பலிற் பாய்ந்தான்; பாயவும், அவன் ஏறிப்போன கப்பலில் இருந்தவர்கள் நடுநடுங்கி நாக்குளறிச் சண்டைக்கு நிற்க நிர்வாகமின்றி, ஹாம்லெத்துக்கு வந்தது வரட்டுமென்று எண்ணி, கப்பலைத் திருப்பி இங்கிலாந்துக்கு நேர்முகமாய் விரைந்து செலுத்திக்கொண்டு சென்றார்கள். அரண்மனை உத்தியோகஸ்தர்கள் இருவரும் ஹாம்லெத் கடிதத்தில் மாற்றி எழுதியபடி பிராணதண்டனைக்கு உரியவர்களே. கெடுகாலம் அவர்களைக் கேடு வரும் இடத்திற்குப் பிடரியைப் பிடித்து தெட்டுவதுபோல, அதிதுரிதமாய்த் தள்ளிக்கொண்டு போயிற்று.

ராஜகுமாரன் கடற்கள்வரது கப்பலில் அவர்கள் கைவசப் பட்டிருந்தான். வலிய வந்து தங்கள் கையிற் சிக்கிய சிறுவனது குலத்தையும் பெருந்தகைமையையும் அறிந்த அக்கள்வர், இப்பொழுது இடர்ப்படும் இளவரசனுக்குச் செய்யும் எவ்விதமான உபகாரத்திற்கும் அவர் உற்ற சமயத்தில் தமக்கு ஏற்ற கைம்மாறு செய்யாதிராரென்று எண்ணி, ஹாம்லெத்தை மரியாதையோடு உபசரித்தார்கள்; தங்களால் ஆகத்தக்க உதவி அனைத்தும் மனப்பூர்வமாய்ச் செய்வதாக வாக்கிட்டார்கள்; குறை ஏதாயினும் உளதாயின், அதை மறைக்காமல் தெரிவிக்க வருந்திவேண்டினார்கள்; மரக்கலத்தை விரைவாகச் செலுத்திச் சமீபமாயிருந்த டென்மார்க்குக்கரையில் ஹாம்லெத்தை இறக்கிவிட்டு, அதிவிநயமாக பயபக்தியோடு உபசரித்துச் செலவுபெற்றுச் சென்றார்கள். பின்னர் ஹாம்லெத் இறங்கின இடத்திலிருந்து அரசனுக்குக்

கடிதம் எழுதி, சமுத்திரமார்க்கத்தில் தனக்கு நேரிட்ட ஆபத்தையும், தான் தப்பிப்பிழைத்து மீண்டும் தன் தேசத்தில் வந்திறங்கிய வரலாற்றையும், அடுத்த தினத்தில் தான் ராஜசமுகத்திற்கு வர நினைத்திருக்கு முட்கருத்தையும் குறிப்பித்து அனுப்பினன். கடிதத்தில் குறித்தபடி மறுநாள் அரண்மனைக்குப் போனபொழுது அவன் முதலிற் கண்ட காட்சி அவன் கண்ணையும் கருத்தையும் புண்ணுக்கி வருத்திய பரிதாபக் காட்சியாயிருந்தது.

ஹாம்லெத் கண்டது மற்றென்றுமல்ல, அவன் உயிரினும் அரிய ஒப்பற்ற சுந்தரியாகிய மந்திரி மகள் ஒபீலியாவின் பிரேதோற்சவமே. தள்ளாத பருவமுள்ள தந்தை இறந்த நாள்முதல் அந்தச் சிறுமிக்கு அறிவு மாறுடியது. தான் கண்ணின் கருவிழிபோல் நேசித்த ராஜகுமாரனது கைவாளால் தன் தந்தை அகால மரணமடையும்படி நேரிட்டதை நினைக்க நினைக்க, அவள் நெஞ்சில் நெருப்புப்பற்றி எரிந்தது; அவள் புத்தி யாதொரு விஷயத்திலும் பிரவர்த்திக்கவில்லை; அவள் பித்தம்பிடித்தவள்போலப் பிதற்றித் திரிந்தாள்; அவள் செய்த செய்கைகளெல்லாம் விபரீதம்; சில வேளை அரண்மனையைச் சேர்ந்த பெருமாட்டிகளுக்கு அன்றலர்ந்த மலர்களைக் கொண்டுபோய்க் கொடுத்து, அம்மலர்கள் இறந்த தந்தையின் சரமோத்ஸவத்தை குறிப்பிக்கும் சின்னங்கள் என்பாள்; சில வேளை அன்பை விளக்கும் பாடல்களைப் பாடுவாள்; சில வேளை மரணத்தைக் குறிப்பிக்கும் கவிகளை ஓதுவாள்; சில வேளை எவ்வகைப் பொருளும் இல்லாத வீண்சொற்களைத் தொடுத்துச் சொல்வாள்; நடந்த துக்கசங்கதியை முற்றும் மறந்தவள்போலவே அவள் இங்ஙனமாக நடந்துவந்தாள். வீட்டுக்குச் சற்றுதூரத்தில் ஒரு சிற்றாறு; அவ்வாற்றங்கரையில் அலரிச்செடி ஒன்றுண்டு; அதன் கிளைகள் ஓங்கி வளர்ந்து ஆற்றிற் கவிந்திருந்ததனல், அவற்றின் பிரதிபிம்பம் ஜலத்தில் தோன்றியது. ஒரு நாள் ஒபீலியா பலவகைப் புஷ்பங்களாலும் இளந்தளிர்களாலும் சிறந்த மாலை ஒன்று தொடுத்தெடுத்துக்கொண்டு, எவரும் அறியாமல் அவ்வாற்றங்கரைக்கு ஏகினள். ஏகி, அங்கிருந்த அலரிச்செடியின் கிளை முனையில் பூமாலையைக் கட்டித்

தூக்கக் கருதி, அச்செடியில் ஏறினள் ; ஏறவும், ஒரு கிளை அவள் உடற்பாரம் தாங்காமல் வணங்கிச் சடிதியில் ஒடிந்தது ; ஒடியவும், தொடுத்தமாலை கையிற் பிடித்தபடி அற்புத சுந்தரியாகிய மந்திரி புத்திரி ஆற்றிற் பொத்தென்று விழுந்தாள். விழுந்தும் அவள் தரித்த ஆடை ஜலத்தில் மிதக்க, அதன் ஆதரவால் சற்று நேரம் அமிழாதிருந்தாள். வந்த விபத்து அவளுக்கு எள்ளளவும் தோன்றவில்லை. களிகூர்ந்து குதிகொள்ளும் நீர்வாழ மச்சமுத லிய ஜெந்துக்களைப்போல், ஒபீலியா மகிழ்ந்து சில பழைய பாடல் களைப் பாடினள். வர வர வஸ்திரம் நனைந்து நீரில் அமிழவும், மந்திரிகுமாரத்தியும் நீர்முகத்தில் உருத்தோன்றாமல் முழுகி, ஆற்றின் அடித் தரையில்படிந்த சேற்றிலமிழ்ந்திறந்தாள். ஹாம் லெத் அரண்மனையிற் சேர்ந்தபொழுது, அரசனும் அரசியும் அரண் மனை உத்தியோகஸ்தரும் கூடிநிற்க, மந்திரி குமாரனை லேயர்ட் டீஸ் இங்ஙனமிறந்த ஒபீலியாவின் சவத்தையடக்கஞ் செய்தற் குரிய சடங்குகள் செய்துகொண்டிருந்தனன்.

அச்சமயத்தில் அங்கே நடந்தேறிய சடங்குகள் இதன் பொருட்டென ஹாம்லெத்துக்கு விளங்கவில்லை. பூராயமாய்க் கேள்வி கேட்கப்புகுந்தால் நடக்கும் கிரியைகளுக்குத்தடையுண் டாகுமென வெண்ணி ஒன்றுங்கேளாது அவன் ஒருபக்கத்தில் ஒதுங்கிப் பார்த்துக்கொண்டு நின்றான். விவாகத்திற்குமுந்தி இறக்கும் கன்னிகைகளின் பிரேதங்களை யடக்கஞ்செய்யுமிடத் தில் புஷ்பங்களை அள்ளி இறைப்பது வழக்கம். தொன்று தொட் டுள்ள அவ்வழக்கத்தைச் சார்ந்து, அப்பொழுது பரிமளிக்கும் புஷ்பங்கள் திரளாகத் தூவப்பட்டன. தூவியது ஹாம்லெத்தின் அருமைத்தாயாகிய பட்டமகிஷியின் கை. தூவும்பொழுது அவள் "மதுர குணத்திற்கு மதுர வாசனைபோன்றவளே! தேனினும் இனிய சுகுணத்தால் சிறந்த கண்மணியே! நான் உனது பிரே தக்குழியில் மலர் தூவுவேனென்று எண்ணியிருக்கவில்லை ; உனது மணவறையில் நவமணிகள் அழுத்திய அழகிய மஞ்சத்தை அன் றலர்ந்த மலர் மாலைகளால் அலங்கரிக்கும் நாள் எப்பொழுது வரு

மென்று எதிர் பார்த்திருந்தேன். எனது உள்ளம் ஒன்று, திரு வுள்ளம் ஒன்றாக முடிந்தன. நீ இதற்கு முந்தியே என் மைந்தன் ஹாம்லெத்தின் பிராணநாயகியாகி இருக்கவேண்டியது!" என மொழிந்தாள். ஒபீலியாவின் சகோதரன், பிரேதத்தை அடக்கஞ் செய்யு மிவ்விடத்தில் அலங்காரமான பூக்களுள்ள பூஞ்செடிகள் முளைத்தால், கண்ணுக்கு வெகு அழகாய்த் தோன்றுமெனத் தன் உள்ளத்தின் அபேட்சையை வெளியிட்டு, உடனே துக்கம் முதிர்ந்து வந்த பைத்தியத்தால் பிரேதக்குழிக்குள் குதித்துக் கூட நின்றவர்களை நோக்கி, "என் சகோதரியின் உடலும், எனது உடலும் இந்தக் குழியில் இடப்படுதற்பொருட்டு மண்ணகழ்ந்து என்மேல் மலைபோலக் குவியுங்கள்" என வேண்டினான். அவன் வாய்மொழியைக் கேட்டவுடன் ஹாம்லெத்துக்கு மறதியாயிருந்த ஒபீலியாவின் நினைவும், அடக்கமாயிருந்த அன்பும் திரும்பின; திரும்பவும் "எனது பிராணபதமாகிய பெண்மணியின் சகோதர னுக்கு உண்டான துக்கம் என் துக்கத்துக்கு மிஞ்சுவது கண்ட பின் இவ்வுயிரை வைத்திருப்பது முறைமையல்ல! இவனைப்போல நாற்பதினாயிரம் சகோதரர் இருந்தாலும், அவர்களுக்கு அவள் மீதுள்ள அன்பு எனது அன்பிற்கு ஈடாகாதே!" என்று அவன் எண்ணினான். அகத்தினழகு முகத்தில் தெரியுமாதலின், அவன் உள்ளத்தில் நிகழ்ந்த எண்ணம் முகத்தில் பிரதிபலித்தது. அகமும் புறமும் அவள்மீது அன்புமயமாகப் பரிணமித்த ஹாம் லெத்துக்கு நின்ற நிலையில் பித்தம் தலைக்கேறியது: ஏறவும், அவனும் பிரேதக்குழிக்குள் பாய்ந்தான். அங்கே நின்ற லேயர்ட் டீஸ், தன் தந்தையும் சகோதரியுமாகிய இவ்விருவர் மரணத்திற் கும் காரணனாயிருந்த ஹாம்லெத் அவனென்றறிந்து, கோபாக் கினி இரு விழிகளினின்றும் கக்க, ஒரு குடும்பத்தில் இணைக் கொலை செய்த பாபிஷ்டனாகிய அவனைக் கழுத்திறுகப் பிடித்தான். இருவருக்கும் மற்போர் தொடங்குமுன், பக்கத்தில் நின்றவர்கள் விரைவாய் அவர்களை விலக்கிவிட்டார்கள். பின்பு பிரேதச் சடங்கு நடந்தேறியது. அது முடிந்தபின், லேயர்ட்டீஸோடு எதிர்ப்பவன்போலச் சிந்தனையின்றிப் பிரேதக்குழிக்குள் தான்

குதித்தது முறையையல்லவென்று ஹாம்லெத் அறிக்கைசெய்து, மன்னிப்புக்கேட்டுக்கொண்டதுமன்றி, ரூபத்தில் எவரும் இணையில்லாத ஒபீலியாவின் மரணத்தைப்பற்றித் தனக்கு உண்டான துக்கத்திற்கு மற்றெவர் துக்கமும் மிஞ்சுவதைப் பார்த்திருந்து சகிக்கும் திறம் தனக்கு இல்லையென உறுதிமொழிகூறினன். அதனல் அவ்வேளையில் அக்குலமக்கள் இருவரும் விரோதம் மறந்து, மனங்கலந்து உறவாடுவோர்போலக் காணப்பட்டார்கள்.

தந்தையும் சகோதரியும் இறந்ததுபற்றி லேயர்ட்டீஸுக்குண்டாகிய துயரத்தையும், ஹாம்லெத்தின்மீது மூண்ட சினத்தையும் சார்ந்து, ஹாம்லெத்தின் உயிரை வாங்கக் கெடுமதி குடிகொண்ட நெஞ்சுடையோனாகிய அவன் சிறியதந்தை ஒரு புனைசுருட்டுச் செய்தான். அவன் லேயர்ட்டீஸை அந்தரங்கத்தில் வரவழைத்து, 'நீ ஹாம்லெத்துடன் கலந்து சம்பாஷித்துறவாடி, சிலம்பவித்தையில் நம்மிருவருள் எவன் மிக்க சமர்த்தனென்று பரீக்ஷித்தறிய விரும்புகிறேன்; இது உனக்கு இஷ்டமா? எனக் கபடமற்ற மித்திரனைப்போலக் கேள்' என்றான். இவ்வாறு லேயர்ட்டீஸ் கேட்கவும் உடனே ஹாம்லெத் அதற்கு உடன்பட்டான். சிலம்பவித்தை செய்யுந்தினம் குறிக்கப்பட்டது. அன்று அவ்விருவர் கற்ற வித்தையின் அதிசயம் பார்க்க அரசன் முதல் அரண்மனை உத்தியோகஸ்தர்கள் அனைவரும் சிலம்பக் கூடத்திற் சேர்ந்தார்கள். அதற்கு முன்னிட்டே லேயர்ட்டீஸ் ஒரு படைக்கலத்திற்கு நஞ்சூட்டி வைத்திருந்தான். இது அரசன் அவனுக்குக் கற்பித்த சூது. கத்தியைக் கைக்கொண்டு சிலம்பம்பண்ணும் அரிய வித்தையில் ஹாம்லெத், லேயர்ட்டீஸ் இருவரும் அதிசய சாமர்த்தியமுள்ளவர்களென்பது லோகப்பிரசித்தம். அதனல், அரண்மனை உத்தியோகஸ்தர் அவரவர் மனம்போன போக்கில் ஆளுக்கு ஒருவனை வியந்து பந்தயம் வைத்தார்கள். சிலம்பக் கத்திகள் சாதாரணமான கத்திகளைபோலக் கருக்குள்ளவைகள் அல்ல; கூர்மழுங்கியவைகள். இது எக்காலத்திலும் எத்தேசத்திலும் இயற்கை. லேயர்ட்டீஸ் செய்த சூதைச் சொப்பனத்திலும் அறியாத ஹாம்லெத் சிலம்பக் கூடத்தில் முறைமைப்

படி வைத்திருந்த கூர் மழுங்கிய கத்திகளில் ஒன்றைக் கையி லெடுத்தான். லேயர்ட்டீஸ் கைக்கொண்ட கத்தியை அவன் பார்க்க நினைக்கவில்லை. சிலம்பஞ்செய்ய லேயர்ட்டீஸ் கைக் கொண்ட கத்தியோ கருக்குள்ளது, அரசன் குறிப்பித்த சர்ப்ப னைப்படி நஞ்சூட்டியது. இதன் அந்தரங்கம் இவ்வாறிருக்க, இருவருக்கும் தொந்தயுத்தம் தொடங்கியது. ஆரம்பத்தில் லேயர்ட்டீஸ் எண்ணிய சூதை நிறைவேற்றுமல், இஷ்டனுடன் இன்பமாய்க் காலக்ஷேபம் செய்பவன்போலத் தோன்றினன். இரண்டொரு முறை தன்னை ஜெயிப்பதற்கு ஹாம்லெத்துக்கு இடம் கொடுத்தான். கபடியாகிய அரசன் ஹாம்லெத்தின் வித் தியாதிசயத்தை மிகப் புகழ்ந்து பாராட்டி, அவன் வெற்றி சிறந்த வீரனுகி வெளிப்படவேண்டுமென்னும் விருப்பமுள்ளவன் போலக் குறிப்பிக்கத் திராக்ஷாரசம் பானம்பண்ணினன்; அன்றி யும் ஹாம்லெத்தே சிலம்பத்தில் வெற்றிபெறுவானென்று மிகுந்த திரவியமும் பந்தயம் வைத்தான். நாலைந்து வட்டம் மேற்சொல் லியவாறு ஆடியபின், லேயர்ட்டீஸுக்கு வீராவேசம் உண்டா யிற்று. அவன் நெருங்கி, நஞ்சூட்டிய கூர்முனைக் கத்தியை வேகமாய் வீசி ஹாம்லெத்தை ஒரு குத்துக் குத்தினன். அது பிராணபாயமான குத்து. யுத்தத்தில் லேயர்ட்டீஸுக்கு உற்சா கம் உண்டானது கண்டு, ஹாம்லெத்துக்கு மிகு சினம் மூண்டது. உள்ளுக்குள்ளாக நடந்த படுசர்ப்பனையை எள்ளளவும் அறியாத ஹாம்லெத் கூர்மழுங்கிய கத்தியால் வீசும் வீச்சு எதற்கு உபயோ கப்படும்? தன்னைப்போல் எதிரியையும் நிஷ்கபடியென்று நினைத்து ஹாம்லெத் இளைக்காமல் அவனுடன் நெருங்கி யுத்தஞ்செய்தான். கை கலந்து சிலம்பஞ் செய்தபொழுது, லேயர்ட்டீஸ் வைத் திருந்த நச்சுக்கத்தி ஹாம்லெத்தின் வசப்பட, இவன் கத்தி அவன் கைவசப்பட்டது. உடனே ஹாம்லெத் லேயர்ட்டீஸின் கூர்முனை புள்ள நஞ்சூட்டிய கத்தியினலே லேயர்ட்டீஸை ஒரு வீச்சாக வீசிக் குத்தி வீழ்த்தினன். படுகுழி வெட்டினேர் அதில் விழக் கடவர் எனும் பழமொழிப்படி, லேயர்ட்டீஸ் பிறனுயிரை வாங் கச்செய்த சதியானது அவன் உயிர்க்கே தீங்காகப் பலித்தது.

இவர்கள் கதி இங்ஙனமிருக்க, அந்த நிமிஷத்திலேயே ராணி எவரோ தனக்கு நஞ்சிட்டாரென்று பதறிக் கதறிக் கூவினாள். அதனுண்மை யென்னவெனில், சிலம்பத்தில் களைத்து வெயர்த்து, ஹாம்லெத் தாகசாந்திக்குப் பானவர்க்கம் ஏதாயினும் வேண்டுமென்று கேட்டால், அந்தக்ஷணமே கொடுக்கச் சித்தமாக, குடிகேடனாகிய அரசன் ஒரு கிண்ணம் நிறையத் திராக்ஷரசபானம் விட்டு, அதில் நஞ்சு கலந்து வைத்திருந்தான். லேயர்ட்டீஸ் சிலம்ப வித்தியா சாமர்த்தியத்தில் ஹாம்லெத்துக்கு இளைத்தால், அரசன் ஹாம்லெத்தைத் தப்பாமல் கொல்லும்படிச் செய்த உபாயம் இது. மோசம் நாசம் என்பதற்கு அரசன் இதில் பின்னும் ஒரு திர்ஷ்டாந்தம் கண்டான். அவன் ஹாம்லெத்துக்குச் செய்திருக்கும் சர்ப்பனையைக் குறித்து ராணிக்கு அறிக்கை செய்ய மறந்துபோனான். ஹாம்லெத்தின் பிராணனை வாங்கக் கருதி, அரசன் எத்தனஞ்செய்துவைத்த விஷபானத்தை ராணி உள்ளதறியாது எடுத்துக் குடித்து மரணவேதனைப்பட்டு, பானத்தில் எவரோ நஞ்சிட்டாரென்று கூவிக்கொண்டு இறந்தாள்; ஏதோ சதி விளைந்ததென்று சமுசயித்து, ஹாம்லெத் அம்மண்டபத்தின் கதவுகளைத் தாமசமின்றிப் பூட்டுவித்து, நடந்த சர்ப்பனை யாதென்று மிகவும் கருத்தாக விசாரித்தான். அப்பொழுது லேயர்ட்டீஸ் நச்சுக் கத்திக் குத்துக்காயத்தால் வருந்திச் சாகுந்தறுவாயில் இருந்தான். பிராணன் போகச் சற்று முந்தி அவன் ஹாம்லெத்தை நோக்கி: "சதிசெய்தவன் மற்றெவனுமல்ல, நான்தான். கூர்மழுங்கிய கத்திக்குப்பதில் கருக்குள்ள கத்தியைச் சூதாகப் பிரயோகித்தேன்; அன்றியும், அதனாற் குத்துப்பட்டவர்கள் தப்பாதிறக்கும்படி அதற்கு விஷமூட்டியிருந்தேன். என் சூது எனக்கே வினையாக முடிந்தது. எனது நச்சுக்கத்தியால் உனக்குப் பட்டகாயம் அற்பமென்று எண்ணாதே. அக்கத்தி சாமானியமானதல்ல. அதன் முனையில் உயிரை வதைக்கும் விஷம் விளங்குகின்றது. அக்கத்தியால் பட்ட காயத்திற்கு மருந்தில்லை. நீ சாக இன்னும் அரை மணி நேரம் இருக்கிறது. நான் செய்த துரோகத்தைச் சித்தம் இரங்கி இன்றென்னை மன்னிப்பா

யானல், எனது பிராணன் வேதனையின்றி இவ்வுடம்பை விட்டுப் பிரியும். இத்தீங்கை ஆலோசித்துச் செய்த பரம துஷ்டன் அரசன்" என அந்தரங்கம் அறிக்கை செய்து இறந்தான். ஹாம்லெத்துக்கும் மரணம் கிட்டியது. சதிக்கத்திவாயில் பின்னும் விஷம் சிறிது இருந்ததறிந்த ஹாம்லெத் திடீரென எழுந்து, எந்தத் தீங்கும் எண்ணமற் செய்யும் கபடியாகிய தன் சிற்றப்பன் வயிற்றில் விசைகூட்டி ஒரு குத்துக் குத்தினன்; குத்தவே, தந்தையின் உருவத்திற்கு அவன் இட்டிருந்த வாக்குத் தடையற நிறைவேறிற்று. இவ்வாறு தந்தையைக் கொன்ற துரோகியை மைந்தன் கொன்று வெப்பகை முடித்தான். பின்பு வரவர ஹாம்லெத்துக்குச் சுவாசபலம் குறைந்தது; உயிர்போகுந்தருணமாயிருந்தது. இந்தக் கபடநாடகமுழுதும் எதிரில் நின்று பார்த்துக்கொண்டிருந்த பிராண சினேகனுகிய ஹொரேஷியோவைத் திரும்பிப் பார்த்து, ஹாம்லெத் "எனது உயிரினும் அரிய தோழனே, இறக்கும் சமயத்தில் நான் சொல்லுகிற சொல்லைத் தட்டாதே; நான் இறந்தால் நீயும் என்னோடு இறப்பதாக அன்று உரைத்ததை மறந்துவிடு. நீ தீர்க்காயுசு பெற்று, இங்கே நடந்த சதிசர்ப்பனையும், அதன் முடிவையும் லோகப் பிரசித்தம் செய்" என வருந்தி வேண்டினன். ஹொரேஷியோ சங்கதிகள் அனைத்தையும் மறைக்காமல் உள்ளபடி வெளியிடுவதாக வாக்குத்தத்தஞ் செய்தான்.

அந்த வாக்கானது பல கெடுதிகளால் புண்பட்டிருந்த ஹாம்லெத்தினது மன நோவை ஆற்றும் அமுத வாக்காகப் பலித்தது. ஹொரேஷியோவும், கூட நின்ற பிறரும் கண்ணீர் ஆறுகப் பெருக மனம் கசிந்தழுது, இனிய குணசீலனுகிய ராஜகுமாரனது ஆத்மாவை விண்ணிற் சஞ்சரிக்கும் தேவர்கள் காக்கக்கடவர்களென்று ஆசீர்வசனம் செய்தார்கள். ஹாம்லெத் இனிய குணங்கள் அனைத்தும் உள்ளவன்; எவ்வுயிரையும் தன்னுயிர்போலெண்ணி அன்புகூர்பவன்; உயர்குலத்தோர்க்கும், விஸ்தாரமான ராஜ்ஜியத்தைக் கட்டி ஆளும் அருந்திறமுள்ள அரசர்க்கும் உரிய சிறந்த லக்ஷணங்கள் உடையவனென்று யாவரும் விரும்பி

மதிக்கப் பெற்றவன். வாழ்நாள் இவ்வாறு குறுகாதிருக்குமாயின், டென்மார்க்கரசரில் எவரும் இவனுக்கு இணையல்லரென்று அனைவரும் மனப்வாக்கு ஒத்துச் சொல்லத்தகும் ராஜ லக்ஷணங்கள் அனைத்தும் உடையோனாகி, அவன் மேலு மேலும் வெற்றி சிறந்து, எட்டுத் திக்கும் புகழ் நாட்டுவானென்பதற்கு ஐயமில்லை.

# எலிஜபெத்து பாரெட்டு ப்ரௌநிங்கு.

1806-1861.

" அடியவர்க் காவியை அரங்கச் செல்வனை
அடிபணிந் தேத்தித் தொழுவோம் யாமே."

நமது நாட்டை அதிகமான சிறப்போடு பரிபாலனம் செய்து ந்த விக்டோரியா சக்கரவர்த்தினியார் காலத்தில் புகழ்பெற்று ளங்கிய மாதுசிரோமணிகளைப்பற்றிச் சரித்திரம் எழுதப்புகுந்த ாம், " கவிசக்கரவர்த்தினி" என்று வேறோர் கவிராயரே புகழும் டியான பெருமை வாய்ந்த எலிஜபெத்து பாரெட்டு ப்ரௌநிங்கு ன்பவளைப்பற்றிச் சொல்லாவிடில் அந்தச் சரித்திரம் பூர்த்திபெறு தன்பது நிச்சயம். அவள் வாழ்வின் வரலாற்றையும் சிறப்பை ம் எடுத்து விரித்துரைத்தால், ஆங்கிலேய ஸ்திரீகளுக்கு உண் ாவது போலவே நமது நாட்டுப் பெண்களுக்கும் அதில் இச்சை ம் இனிப்பும் உண்டாகுமென்றே நம்புகிறோம். ஏனெனில், ாயாளியாயும் சுகதேகமற்றவளாயும் பலநாள் படுக்கையறையை ட்டு வெளிப்புறப்படக் கூடாதவளாயும் அம்மாது இருந்தபோதி ும், தனது நுண்ணறிவாலும் ஜீவகாருண்ணியத்தாலும் புண் ியவசத்தால் தான் பெற்ற வாக்குமகிமையாலும் அநேகம் அரிய ரிய கிரந்தங்கள் செய்து காவியாலம்பநம் பண்ணினாள். தலின் ஒருவர் எவ்வளவு வருத்தமுற்றிருந்தபோதிலும், தம் மப்போன்ற வேறு பெண்களுக்கும், சிறுவர் சிறுமிகளுக்கும் ருத்தம் நீக்கிச் சுகமுண்டாக்கித் தமது ஜன்மத்தை ஸபலமாக் கூடுமென்பதற்கு அவளது சரித்திரம் சிறந்த திருஷ்டாந்தமா ிறது. எலிஜபெத்து மேல்டன் பாரெட்டு என்பவள், இன் க்கு ஏறக்குறைய 95 வருஷங்களுக்கு முன்னே 1806-ம் வரு த்தில் ஆங்கிலேயநாட்டின் வடபாகத்தில் பிறந்தவள். இவள் ந்த சிறிதுகாலத்துக்குப்பின் இவளது பிதா மேல்நாட்டில்

தமக்குச் சொந்தமான ஒரு அழகிய பிரதேசத்தில் வீடுகட்டி வாழ்ந்துவந்தாராகையால், இப்பெண்மணி சிறுபிராயமுழுதும் அங்கே வளர்ந்துவந்தாள். அவளுக்கு இளமைப்பருவம் தொடங்கியே செடி கொடி புஷ்பம் முதலியவைகளில் விருப்பம் அதிகம். அவளது உடன் பிறந்தவர்களும் வெள்ளை ரோஜாவை நன்றாய்ப் பரிபாலிக்கும் திறமையுள்ளவளென்றே அவளைக் கொண்டாடியிருக்கிறார்கள். அவளும் தனது கவிகளில், பூஞ்செடிகளுக்குப் பாத்திகட்டிப் பலிக்கும்படி செய்யும் விதத்தைப்பற்றிக் கூறி, பசும்புல் தரையில் மனிதனைப்போல் ஒரு உருவம் மிகப் பெரியதாகப் புஷ்பத்தால் உண்டாக்கி அவ்வுருவத்திலே கண்களிருக்கவேண்டிய விடத்தில் நீலோத்பலங்களை வைத்து வளர்த்து, ஆகாசத்தை நோக்கி மலர்வன குவிவனவாய் அமைத்ததாக வர்ணனையையும் செய்திருக்கிறாள். ப்ரௌநிங்கு இளம்பிராயத்திலேயே நான்கு அதிகாரத்தில் ஒரு பெரிய காவியம் எழுதினாள். அதைக்கண்டு அவளது தகப்பனார் மிகவும் பெருமைகொண்டு அதை அச்சில் பதிப்பித்தார். அவள் மிகவும் மெல்லிய தேகமுடையவளாதலால் சௌக்கியக்குறைவு உண்டாகி வெகுவாய் அவள் வீட்டுக்குள்ளேயே இருக்கும்படியாயிற்று. அந்த வேளைகளில் எழுதுவதும், கையில் கிடைத்த புஸ்தகங்களைப் படிப்பதும், தனது அருமைத் தமையன் எட்வர்ட்டு என்பவன் கிரீக்கு, லத்தீன் படிக்கும்போது தானும்கூடப் படிப்பதுமே அவளுக்குப் பொழுதுபோக்காக இருந்தன. அவள் இந்தவிதமாக எழுதிப் படித்துக் காலங்கழிப்பது அவளது பாட்டியாருக்கு இஷ்டமில்லை. இப்படி கிரீக்கு படிப்பதைவிட எலிஜபெத்துப் பூ வேலையும் தையல் வேலையும் நன்றாய்ச் செய்து முடித்தால் மிகவும் மேன்மையாயிருக்கும் என்று அவள் சொல்லுவது வழக்கமாம். ஆனால் எலிஜபெத்தின் பிதாமட்டும் அவள் படிப்பதையும் எழுதுவதையும் வெகுவாய் அபிவிர்த்தி செய்வதிலேயே கருத்தாயிருந்தார். மேலும் கண்ணில்லாத அந்தகரான சிநேகிதரொருவர் கிரீக்கு பாஷையில் மிகவும் நிபுணராயிருந்தார். அவர் அந்தப் பாஷையில் அவளுக்கு அதிகமான ஊக்கத்தை உண்டாக்கினார்.

அவள் இருபது பிராயமானபோது தான் பாடின கவிகளை யெல்லாம் சேர்த்து ஒரு புத்தகமாகத் தன் பெயரைக் குறிக்காமல் அநாமதேயமாய்ப் பதிப்பித்து வெளிப்படுத்தினாள். அக்கவிகள் அத்தனையாய்ச் சுகமானவைகளல்ல. ஆயினும் அவள் அவ்விஷயத்தில் முயற்சியை விட்டுவிடவில்லை. இப்படியிருக்க இன்னம் இரண்டு வருஷங்களுக்கெல்லாம் அவள் தாயை இழக்கும்படி நேர்ந்தது. தாயிறந்துபோகவே, தகப்பனாருக்கு ஆறுதல் சொல்லித் தேற்றவும், அவளுடைய உடன் பிறந்தவர் ஏழுபேரையும் காத்து ரக்ஷிக்கவும், அவளைவிட வேறே கதியில்லாமல் போய்விட்டது. இந்த வருத்தம் போதாதென்று கடவுள் அவள் பிதாவுக்குத் திரவிய நஷ்டமு முண்டுபண்ணினார். 'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' என்றபடி இப்படிப் பலவிஷயத்திலும் கேடு சம்பவிக்கவே மேல்டன் பாரெட்டு என்பவர் மாவரன் மலைப் பிரதேசத்திலுள்ள தமது நேர்த்தியான மாளிகையை விற்றுவிட்டு லண்டன்மா நகரத்துக்குப் போய்ச்சேர எண்ணங்கொண்டார். ஆயினும் வேறு பல இடையூறுகளால் இரண்டு வருஷகாலம் அங்கே போய்ச்சேர முடியாமல் இங்கிலாந்தின் தென்கரையில் கடலோரத்துப் பட்டணமொன்றில் காலங்கழிக்க வேண்டியதாயிற்று. இக்காலத்தில்தான் நமது மாது தனது இரண்டாவதான பிரபந்தத்திரட்டைப் பதிப்பித்து வெளியிட்டாள். இது 1833-ம் வருஷம். பிறகு லண்டன் நகரஞ் சேர்ந்தார்கள். ஜனனம் முதல் வெளிகளிலே கடவுள் சிருஷ்டிகளின் இயற்கை யழகைக்கண்டு நன்றாயனுபவித்துச் சுகமடைந்த நமது மாதுசிரோமணிக்கு, லண்டன் நகரத்து மாளிகைகள் நிறைந்த தெருக்களில் அடைபட்டுப் பூர்வ சுகமெல்லாங் கெட்டு மூச்சுக்காற்றும் நிர்ப்பந்தமாய்ப் பெற வேண்டியதாயிருந்தது வெகு கஷ்டமாயிருந்திருக்கவேண்டும்.

இந்தக் காரணங்களெல்லாம் ஒருங்குசேர்ந்து, தேக சௌக்கியம் குறைந்து, வியாதியுண்டாகி, அவள் தனது படுக்கை அறையை விட்டு வெளியிலே புறப்பட முடியாமற்போயிற்று. ஆயினும் கவிகள் நூதனமாய்ப் பாடுவதிலும் புஸ்தகங்களைப் படிப்பதிலும் காரியம் மேன்மேலும் அதிகமாயிற்று. மேலும் புதியவர்களான

சிநேகிதர் பலருண்டானார்களாகையால், தான் அசௌக்கியத்தால் அவர்களைப் போய்ப் பார்க்க முடியாத காலங்களில் நேரே சம்பாஷிப்பதைப்போல அவர்களுக்குக் கடிதங்கள் எழுதிக் காலங் கழிப்பாள்.

அவள் பாடிய தனிப்பாடல்களெல்லாம் அக்காலத்துப் பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் வெளியாயின. மிஸ் மிட்பர்ட்டு என்னும் பாடகியின் வேண்டுகோளின்மேல் எழுதப்பட்ட "கங்கையின் கதை" என்னும் பாடலானது, கங்கா நதியில் பல இந்துப் பெண்கள் கூடித் தங்கள் நாயகர்கள் வந்து கூடுவதைப்பற்றிச் சகுனம் பார்க்கும்படி அழகாகச் சித்திரிக்கப்பட்ட கொட்டாங் கைச்சிகளில் சிறிய விளக்குகளை ஏற்றிப் புஷ்பத்துடன் மிதக்க விடுவதைப்பற்றிய வெகு நேர்த்தியான ஆற்றுவரிப்பாடலாம்.

"மிகவும் அழகான சந்திரபிம்பம்போன்ற முகமும், அதனிடையில் எடுப்பும் சாய்ப்புமாய் அமைந்த நெற்றியும், பூரணசந்திரன் முழுநிலாவைச் சொரிந்தாற்போல் முத்தினொளியை வெளிவிடுகிற வடிவொத்தவாயும், கொவ்வைக்கனியும் கோலந்திகழ் பவளக்கொழுந்துண்டமும் போன்று பனிமொழிகளுக்கு ஆகாரமான உதடும், கறுத்துப் புடைபெயர்ந்து மிளிர்ந்து நீண்டு ஒளி வீசுகின்ற தாமரைபோன்ற கண்களும், குளிர்ந்து அழகுபெற்ற இரண்டு தாமரைமலர்களை மதத்தாலே மிதித்தாடுகின்ற இரண்டு வண்டு வரிசைபோன்ற புருவவட்டங்களும், சுருண்டு நீருண்ட மேகம்போல் கறுத்து விளங்கும் கூந்தலும், மேன்மையும் மிருதுவும் பொருந்தி ரோஜாமலரின் நிறமும் புகழுமுடைய சரீரத்தின் அழகுடையவள் இப்பெண்கள் நாயகம்" என்று மிஸ் மிட்பர்ட்டு என்பவள் இவளுடன் ஆதியில் சிநேக ஆரம்பத்திலேயே இவளைப் பற்றி வர்ணித்திருக்கிறாள். இதனோடு இவள் வம்சத்துக்குச் சுபாவமாயுள்ள அழகையும், நிறம், விலை, இவைகள் பொருந்திய உடுப்பையும் சேர்த்துக் கூறின், அவளது சுவரூபம் இத்தன்மையதென நன்றாய் விளங்கும்.

அவள் ஒரு சமயத்தில் அருமையும் ஆழ்ந்த நுண்பொருளும் தத்துவ விளக்கமு முடையவளாகிய கவிகளைப் பாடுவாள். சில

கருணங்களில் வெள்ளையாயும் உருக்கமாயும் யாவர் மனதையும் கவரத்தக்க நயத்தோடு, தனக்கு உஷ்ணதேசங்களிலிருந்து பரிசாக வந்த இரண்டு புறுக்களின்மேல் கட்டிய கவிபோன்ற பாடல்களையும் பாடுவாள். 1837-ம் வருஷத்தில் நாலாவது உவில்லியம் தேகவியோகமானவுடன் அப்போது பட்டம்பெற்ற நமது மகாராணியார் விக்டோரியாளின்பேரில் ஒரு பாட்டைப் பாடிப் பிரசுரம் செய்தாள். பிறகு ஒரு வாரத்துக்கெல்லாம் "விக்டோரியாள் சிந்திய கண்ணீர்" என்கிற உருக்கமான வாழ்த்து வரிப் பாடல்களைப் பாடினாள். அந்தக் கவியானது இந்த 63 வருஷ காலமாக அடிக்கடி எல்லாரும் கொண்டாடத் தக்கதாயிருந்தது.

எலிஜபெத்து மாது, இப்படி தான் இடைவிடாமல் படிப்பதோடு, தனது சகோதரர்களுக்கும் கிரீக்கு கற்பித்துவந்தாள். அவளது தேகம் அதிகமாக மெலிவடைந்து மிகுந்த விசாரத்தைக் கொடுக்கும்படியான நிலைமைக்கு வந்ததைக் கண்டு, வைத்தியர் லண்டனைக்காட்டிலும் மிகுதியும் குளிர்ச்சியும் சுகமுமுள்ள நாட்டிற்குப் போய் வாசஞ்செய்யும்படி எச்சரிக்கை செய்தார். ஆனாலும் தூர பிரயாணத்துக்குத் தகுந்த தேகவலிவில்லாமையைக் கண்டு அவள் அண்ணனுடன் அவளைத் தென்மேற்குக் கரையோரத்திலுள்ள தூர்க்வே என்னும் நகரத்துக்கு அனுப்பினார்கள். அவள் அவ்விடத்தில் பிழைப்பாள் என்கிற நிச்சயமில்லாமல் தத்தளித்துக்கொண் டிருந்தாளாயினும், இடையிடையில் சற்றுத் தெளிவாக இருக்கும்போது படிப்பையும் எழுதுவதையும் நிறுத்தாமல் கையாண்டுவந்தாள். இப்படிப்பட்ட சமயத்தில் "உலகத்திலே யாவரும் அதிக ஆவலாக ஜீவனோடிருக்க விரும்புவார்கள். எனக்கோ கவலையற்று ஓய்வுற்று இருப்பதே விருப்பம். இவ்விதமான நிம்மதியைப்பற்றிச் சொல்லும் பாசுரங்களே நான் மிகவும் ஆசையோடு விரும்பும் பாசுரங்கள்" என உரைத்தும், "தேவன் தமது அன்பர்களுக்கு அறிதுயிலளித்துச் சுகமுறுகிறார்" என்று பொருள்படும்படியான பழமொழி வாக்கியத்தை எடுத்து உதாரணங்காட்டியும், தனது நண்பர் ஒருவருக்கு எழுதியிருக்கிறாள். அக்காலத்தில், மிகவும் மேன்மையும் கருத்தும் நிறைந்த

"தூக்கம்" என்கிற தனிப்பாடல் முதலியவைகள் அடங்கிய மூன்றும் புஸ்தகத்தை அச்சிடுவித்து வெளிப்படுத்தினாள்.

இவ்வாறு அதிகமான நோய்கொண்டு எலிஜபெத்து மாது வெகுவாக வருத்தமுற்றிருக்கும்போது அவளுக்கு இன்னொரு விசனமுண்டாயிற்று. அவளுடன் பிரியாத்தோழனாய் அவளிடத்தில் அதிகமான அன்புடையவனாயிருந்த அவளது அண்ணன் எட்வர்ட்டு சிறு படகு தள்ளிப்போகையில் படகு கவிழ்ந்து முழுகிப்போய்விட்டான். அந்தப் பிரேதத்தைக் கண்டெடுப்பதற்கு வெகுநாள் சென்றன. இதனிடையில் அவள் பட்ட கஷ்டத்தையும் வருத்தத்தையும் பார்த்தால், நோயாளியான அவளும் விசனந்தாங்காமல் இறந்துபோவாளென்றே தோன்றியது. "இந்தத் துன்பமானது என்னை இடி இடித்துத் தள்ளினதுபோலிருந்தது" என்று அவளே எழுதியிருந்தாளாயினும், பிறகு அதைப்பற்றிப் பேசவாவது, தனது பிராண சிநேகிதர்களுக்கு எழுதவாவது அவளுக்குத் துணிவுண்டாகவில்லை. என்றாலும் தன் மனதிலுண்டான விசனத்தை "மஹார்ணவத்திலிருந்து" என்னும் சில வரிப்பாடல்களில் மிகவும் அழகாகப் பாடியிருக்கிறாள். சற்றே சரீரத்தில் வலிவுண்டானதும் தன்னூருக்குத் திரும்பிப் போகவேண்டுமென்று அவளுக்கு அதிகமான ஆசை எழுந்தமையால், 1841-ம் வருஷம் வசந்தகாலத்தில் புறப்பட்டுப்போய், நாலாவது வருஷம் திரும்பிவந்து சேர்ந்தாள். அப்பொழுது அவளது தகப்பனார் லண்டன் நகரத்தில் வின்பில் தெருவில் குடியிருந்தார். இவளது கவன சக்தியைக் கண்டு இவளுடன் நட்புக்கொள்ள அநேகர் விருப்பமுற்று வந்தார்கள். ஆனால் வெகுநாளாக வியாதியாயிருந்து தனியே படித்துக் காலங்கழித்தவளாகையால் அந்நியரைப் பார்த்துப் பேசுவது அவளுக்கு வருத்தமாகவே யிருந்தது. 1844-ம் வருஷத்தில் அவள் தனது பாடல்களை மறுபடியும் சேர்த்து அச்சிடுவித்தாள். அதில் எல்லாராலும் கொண்டாடப்பட்ட "பாலர் அழுகை" என்கிற பாடல் வெளிவந்தது.

இது வெளியானபோது, நிலக்கரிச் சுரங்கங்களிலும் யந்திரசாலைகளிலும், சிறுவர்களும் சிறுமியர்களும் வேலைசெய்துவரும் காலத்தையும் விதத்தையும்பற்றிச் சட்டம் ஒன்றும் ஏற்படவில்லை,

அதுவிஷயமாக விசாரணைச் சபையொன்று ஏற்படுத்தவே, மிகவும் கோரமான சங்கதிகள் வெளியாயின. ஏழைப்பெண்களும் சிறு குழந்தைகளும் பூமியின் கீழ் நிலவறைகளில் நிலக்கரி ஏற்றிய பாரமான வண்டிகளை, இருப்புச் சங்கிலிகளைத் தங்கள் அரையில் கட்டிக்கொண்டு தலைநிமிர்ந்து நடக்கமுடியாத இருட்டுவழி மூலமாய் நாள்முழுதும் சூரிய வெளிச்சமும் நல்லகாற்றும் இன்னதென்று தெரியாமல், நிர்ப்பந்தமாய் இழுத்து வேலை செய்து வருகிறார்கள் என்று தெரியவந்தது. குழந்தைகள் சற்று விளையாட்டுச் சுகமனுபவிக்கவாவது படிப்பு என்கிற வாசனையைப் பெறவாவது கொஞ்சமேனும் இடமில்லாமல்போகவே, அவர்கள் நாகரீகம் கெட்டு உணர்ச்சியற்றவரானார்கள் என்பது ஆச்சரியமல்ல. யந்திரசாலைகளிலும் இதேமாதிரியாகவே ஓய்வு என்பதற்கு இடமேயில்லை ; இருபத்துநான்கு மணிகொண்ட ஒருநாளில் 14, 15 மணிகாலம் ஒரே வேலையை ஓயாமலே செய்யும்படி பண்ணிவந்தார்கள். இவ்வாறு நாள் முழுதும் உழைத்துக் குணமற்றுப்போன பெண்களுக்குத் தங்கள் வீடுகளிலும் சௌக்கியமென்பது எப்படி உண்டாகும்? ஆனதுபற்றியே இவற்றையெல்லாம் கண்டு மனமிரங்கிய தர்மிஷ்டர்களாகிய சிலகனவான்களும் உத்தமஸ்திரீகளும் ஒன்றுசேர்ந்து, இச்சிறுவர்கள் சிறுமிகளின் வேலை விஷயமாகச் சட்டம் ஒன்று ஏற்படுத்தி ஒழுங்குக்குக் கொண்டுவரவேண்டும் என்று பார்லிமெண்டு சபையாரைப் பலமுறை வேண்டிக்கொண்டார்கள். அப்படியே அந்தச் சபையார், நிலக்கரிக்கனிகளில் சிறுவர்களையும் ஸ்திரீகளையும் வேலைசெய்ய வைத்துக்கொள்ளக் கூடாதென்றும், 14 வயதுக்குட்பட்ட சிறுவர்களையும் சிறுமிகளையும் யந்திரசாலைகளில் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாதென்றும், வேலைசெய்யவேண்டிய கால அளவையும் நன்றாய் நிர்ணயித்துச் சட்டம் ஏற்படுத்தியதுமல்லாமல், ஒவ்வொருவனும் தனது குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிக் கட்டாயமாய்ப் படிப்பிக்கவேண்டும் என்றும் சட்டம் ஏற்படுத்தினார்கள். இவ்வாறு சட்டங்கள் ஏற்பாடாகி ஆசாரத்துக்கு வரச் சில வருஷங்கள் சென்றன. இது விஷயமாக அதிக முயற்சியோடும் ஊக்கத்தோடும்

வருந்தியுழைத்து, ஜனங்களுக்கு அந்தந்த இடங்களில் நடக்கும் கொடுமைகளையும் அநியாயங்களையும் எடுத்துக்காட்டிக் கண்களைத் திறந்துவிட்டவர்களில் எலிஜபெத்து என்பவளும் முதன்மையானவள் என்று உறுதியாகச் சொல்லலாம். இதுவிஷயமாகவே எழுதப்பட்ட "பாலர் அழுகை" என்னும் பாடல்களால்தான், அநேகருக்கு இந்த விஷயத்தில் மனஞ்சென்று சீர்திருத்தங்கள் செய்யவேண்டும் என்கிற எண்ணமுண்டாயிற்று. அவர்கள் மிகவும் உருக்கமான ரஸம்நிறைந்த கவிகளாதலால், அவற்றி லிரண்டொன்று இவ்விடத்தில் வரைவோம்.

இவ்வுயர் நாட்டி னுள்ளீ ரேழையர் பாலர் விம்மி
யவ்வமோ டழுதல் கேட்டீ ரில்லையோ முன்ன மென்றே
திவ்வகை யெனத் தேருத விளமையாம் பருவந் தன்னிற்
செவ்விய தாய்மார் போடு சேர்த்ததான் மகிழ் உண்டாமோ.

கோவிளங் கன்று மாட்டுக் குட்டியு மானின் கன்று
மேவிய பறவைக் குஞ்சும் வேறுசிற் றுயிருந் தத்தம்
நோவுறு விளமை தன்னில் நுவலுமின் புற்றி ருக்கும்
பாவமோ வேழைப் பாலர் பரிதவித் தழுதல் பாரீர்.

ஆட்டிளங் குட்டி யெல்லா மண்ணிய வயலில் மேயக்
கூட்டினிற் பறவை யெல்லாங் கொஞ்சுகின் றனமான் கன்று
கோட்டுறு மரத்தி னீழல் குலவக் கண் டாடுகின்ற
மேட்டரும் புரவி சாய மேற்றிசை சாயும் பாரீர்.

பேர்பெறு சுதந்த ரங்கள் பெற்றவிவ் விராச்சியத்தில்
நேர்தர விளையாட் டாற்று நேசமா மிளமை தன்னில்
வார்தரு மேழைப் பாலர் மாத்திரம் கண்ணி னின்று
நீர்சுரந் தழுகை பார்த்தல் நியாயமோ நாட்டீர் சொல்லீர்.

என்று இவ்வாறு பாடினுள். கரைப்பார் கரைத்தால் கல்லுங் கரையுமாதலால், கல் நெஞ்சினரையும் உருக்கத்தக்க விதமாக அச்சிறுவர்கள் படுந்தீங்குகளை மேற்சொல்லியவண்ணம் எடுத்துரைத்தமையாலன்றே அப்படிப்பட்ட நல்ல சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன!

இதுபோலவே அமெரிக்காக்கண்டத்து அடிமைகள் படும் வருத்தத்தைக் கேள்வியுற்று அவர்களை விடுவிக்கும்பொருட்டும், இத்தாலி நாட்டார் அயல் தேசத்துக் கொடுங்கோன் மன்னர் கைப்பட்டுப் பரிதவிப்பதை நீக்கும்பொருட்டும் அவள் மிகவும் முயன்றாள்.

ஆகவே அது விஷயமாக அவளுக்கு மனோபாவமும் மெய்யுணர்ச்சியும் அதிகமாதலால், அவள் இதைப்பற்றி எழுதிய சிறப்புப் பாடல்களை உலகத்தாரெல்லாரும் படித்துச் சிந்தனை பண்ணுகிறார்கள். ஆனதுபற்றி அவைகள் ஒரு நாளும் மறக்கத்தகாதவையேயாம்.

1841-ம் வருஷம் முதல் 46-ம் வருஷம் வரையில் அவள் லண்டன் நகரத்தில் சுகமற்ற ஒரு சிறு வீட்டின் பின்புறத்தில் வெளிச்சமும் காற்றும் நன்றாய் நடையாட இடம் போதாத அறையில் காலம் கழித்துவந்தாள். அப்படியிருந்தாலும், இடையறாது படிப்பதிலும் கவிகள் பாடுவதிலும் கிரந்த கர்த்தர்களாகிய தனது சிநேகர்களுடன் கடிதப் போக்குவரவு செய்வதிலும் அவள் முயற்சி குறையவே இல்லை. இப்பொழுதுதான் தனது கவிகள் மூலமாக ரோபெர்ட்டு ப்ரௌநிங்கு என்பவருடன் சிநேகமாயினாள். அவரும் இவளைப்போல ஒரு கவிராயர்தாம். ஆனால் இவளத்தனை கீர்த்தி பெற்றவரல்லர். அவரது கவிகள் மிகவும் கடினமாய்ப் பொருள்தரத்தக்கவையாதலாலும், அவரது சிறந்த காவியம் இனியே வெளிவரவேண்டியிருந்ததாகலாலும், அவரை நன்றாய்த் தெரிந்தவர்மட்டும் அவைகளை நன்கு மதித்துவந்தார்கள். பாரெட்டு அவரது கவிகளைப் படித்து அவைகளை விசேஷமாய் அநுபவித்திருந்தாள். ஆயினும் அவளது அசௌக்கியத்தால் இருவரும் நேரில் சந்திக்கச் சமயம் வாய்க்காமலேயிருந்தது. 1844-ம் வருஷத்தில் அவள் பதிப்பித்து வெளியிட்ட பாடல்களடங்கிய புத்தகத்தில் ரோபெர்ட்டு என்னும் கவிராயரைப்பற்றியும், அவர் அப்பொழுது எழுதியிருந்த பாக்களைப்பற்றியும் மிகவும் புகழ்ந்து கூறியிருந்தாள். 1845-ம்

வருஷம் ஜனுவரி மாதத்தில் அவர் தமது சினேகிதன் ஒருவனால் அவள் புத்தகம் தமக்குக் கிடைத்ததை வெளியிட்டும், அவளது அழகிய "உயிருள்ள பாடங்களைப் புகழ்ந்தும்" ஒரு கடிதம் அவளுக்கு எழுதியனுப்பினார். மேலும் அவளது உறவினராகிய நேசரொருவருடனே தாம் ஒருதரம் அவளைப் பார்க்க அவள் வீட்டுக்கு வந்திருந்ததாகவும், அப்போது அசௌக்கியமாயிருந்தபடியால் அந்நியரைப் பார்க்கமுடியாதென்பதைக் கேள்வியுற்றுத் திரும்பிப் போய்விட்டதாகவும் எழுதியிருந்தார். அது முதலாக அவ்விருவரும் கடிதமூலமாகப் பாக்களைப்பற்றியும் வேறு சங்கதிகளைப்பற்றியும் ஆராய்ச்சி செய்து வந்தார்கள். இப்படி மூன்று நான்கு மாதங்கள் கழிந்ததும், ரோபெர்ட்டு ப்ரௌநிங்கு இவளை வந்து பார்க்கவும், இவள் அவரைப் போய்ப் பார்க்கவும் இடமுண்டாயிற்று. பிறகு கொஞ்ச காலத்துக்கெல்லாம் ரோபெர்ட்டு என்பவர் தமக்கு அவளிடத்தில் உண்டாயிருந்த மதிப்பையும் நேசத்தையும் நன்றாய் வெளியிட்டார். எலிஜபெத்து இத்தனை காலமாக நோயாளியாயிருந்தபடியால் தனக்குச் சுகமும் ரோக நிவர்த்தியும் இந்த ஜன்மத்தில் உண்டாவதில்லை என்றே நினைத்திருந்தாள். அதனால் கலியாண விஷயமாய் ஆசரித்துப் பேசும் பொழுது அதைச் சிறிதும் காதுகொடுத்துக் கேட்பதற்கு அவளுக் கிஷ்டமேயில்லை. அவளது பிதாவும் ஒருவகைப் பிடிவாதமுள்ளவராயும் உலக நடவடிக்கைகளில் நன்றாய்ப் பழகாதவராயுமிருந்தபடியால் இவள் சௌக்கியப்படுவாள் என்று எண்ணவே இல்லை. பின்னுஞ் சிறிதுநாளைக்கெல்லாம் இவள்தான் கொஞ்சம் சம்மதித்தாள். ஆயினும், பிதா சம்மதிக்கமாட்டாரென்று நிச்சயமாயிருந்தபடியால், அவருடைய அநுமதியின்றியே ஏகாந்தத்தில் கலியாணம் செய்துகொள்ளத் தீர்மானித்து அந்தப்படியே 1846-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் அந்தச் சடங்கை நிறைவேற்றிக்கொண்டாள்.

உடனே ஸ்திரீபுமான்களிருவரும் தேகசௌக்கியத்துக்காக உஷ்ணதேசங்களை நோக்கிப் பிரயாணமானார்கள். அவள் இவ்

வாறு செய்ததற்காக அவள் பிதா கோபங்கொண்டு அவளைத் திரும்பவும் பார்க்கமாட்டேனென்று சொல்லிவிட்டார். எத்தனையாக வேண்டிக்கொண்டபோதிலும் அவர் இரங்கவே இல்லை. மேலும் அவள் அவருக்கு அனுப்பிய கடிதங்களை யெல்லாம் பிரிக்காமலே வைத்திருந்து கொஞ்சநாள் சென்றதும் அவைகளை அப்படியே திருப்பி அனுப்பிவிட்டார். தான் அடிநாட்களில் மிகவும் அன்புபாராட்டிவந்த தகப்பனார் இப்படிப் பிடிவாதமாய்க் கோபங்கொண்டிருந்ததினால் அந்நாட்டுக்குத் திரும்பிவர அவளுக் கிஷ்டமில்லாமலே போய்விட்டது. பிறகு தனது வாழ்நாள் முழுதும் தனது கணவனுடன் இத்தாலியாவில் கழித்தாள். ஆனால் சிற்சில சமயங்களில் இங்கிலாந்துக்கும் வந்துபோவாள். அவளது ஸம்ஸார வாழ்க்கையானது முன் தகப்பனுடன் வாழ்ந்த விதத்துக்கு முற்றும் மாறாயிருந்தது. அத்தனைகாலம் வருத்தத் தோடு ஓரறையில் அடைபட்டிருந்ததுபோய், கலியாணமானபின் கணவனுடன் விசேஷமான உல்லாசமும் சௌக்கியமும் அடைந்து வந்ததாக அவளே எழுதியிருக்கிறாள்.

ரோபெர்ட்டு ப்ரௌநிங்குக்கும், இப்பொழுது கலியாணம் பண்ணிக்கொண்ட நமது மாதுசிரோமணிக்கும் கலியாணத்துக்கு முன் நடந்துவந்த கடிதப் போக்கு வரவுகளையெல்லாம் சேர்த்துத் திரட்டி, அவ்விருவரும் அழியாப் புகழ்பெற்று ஜீவன் நீங்கி வெகுகாலம் ஆனபிற்பாடு 1899-ம் வருஷத்தில் இரண்டு பெரும் புத்தகமாக அவைகளை அச்சிற் பதிப்பித்தார்கள். அவைகள் மிகவும் ரஸமானவை. நமது மாது எவ்வாறு அசௌக்கியமாகிய அந்தகாரத்தில் மறைந்து கிடந்தாளோ, எவ்வாறு ரோபெர்ட்டு அந்த அந்தகாரத்தைச் சுகமாகிற வெளிச்சத்தைக்கொண்டு பிரகாசிப்பித்தாரோ, அவை அவற்றால் நன்றாய் வெளியாகின்றன. நோயிலடிப்பட்டுக் கிடந்த அவளுக்குப் புருஷன் ஒருவன் வேறோர் பிரயோஜனமும் வேண்டாமலே தன்னை நேசிக்கக்கூடும் என்கிற எண்ணமானது மனதில் உதிக்கவே இல்லை.

ரோபெர்ட்டு ப்ரௌநிங்கு அவள் எழுதிய கடிதமொன்றில் தன்னிலையை அவளே மிகவும் விரிவாயும் உருக்கமாயும் கூறியிருக்கிறாள். அதாவது, “உமது பரிசத்தினால் புனிதமாவதற்கு

முன்னர் எனது வாழ்க்கை இத்தன்மையாயிருந்ததென உமக்குத் தெரியாதே. எனது அறையில் தனியாயிருந்து உலகவாழ்க்கையில் அருவருப்புண்டாகி நான் எழுதும் பாக்களிலும் சுகமுண்டாகாமல், அவைகள் என் அறையிலிருந்தால் அவைகளுடைய பெருமையும் கெட்டுப்போமென்று எண்ணி அவைகளையும் பிரித்தெறிய வேண்டியதாயிருந்தது. எனது நாய்கூட என்னை விட்டு நீங்கி வெளியேபோய்ச் சுகம்பெறாமல் நாள் முழுதும் என்னோடுகூட இருட்டில் நின்று வருந்தவேண்டியதாயிற்றென்று அதனிடத்தில் எனக்கு மிகவும் பரிதாபமுண்டாகியது. எனது உறவினர் என்னை உபயோகமற்றவள் என்றும் குடும்பபாரமென்றும் நினைக்காமலும் வெளியிடாமலும் இருந்தது அவர்களது மேன்மையையும் பெரிய உபகாரகுணத்தையும் வெளியிடுகிறது என்று எனக்குத் தோன்றியகாலத்தில், நீர் நேசக்கடிதம் எழுதியதைக் காணும்போது என்னென்று நினைப்பது" என்றிவ்வாறு கூறியிருக்கிறாள்.

ப்ரௌநிங்கும் அவரது மனைவி நமது மாதுமணியும் இத்தாலி நாட்டில் கொஞ்சகாலம் பீசாவிலும் பிறகு ப்ளாரென்ஸிலும் வசித்துவந்தார்கள். இங்கிலாந்து நாட்டில் அவள் தனது சிநேகிதருடன் கடிதம் போக்குவரவு செய்துவந்தவளாயினும், அவளையும் அவளது நாயகரையும் அடிக்கடி வந்து பார்த்து விசாரிப்பவர்கள் இத்தாலியரும் அமெரிக்காக்கண்டத்தாருமே. அக்காலத்தில் இத்தாலியர் ஆஸ்திரியாநாட்டு நிர்ப்பந்தத்தினின்றும் விடுவித்துக்கொள்ள முயன்றார்கள். அப்போது நமது மாது தானும் அந்நாட்டாருடன் சேர்ந்துகொண்டு தனது சக்தி முழுவதும் கொண்டு நாட்டுக்கு க்ஷேமம் உண்டாகும்படி பாடுபட்டாள். அவர்கள் படும் வருத்தங்களைக் கண்டு மனம் இளகித் தனது அபிப்பிராயங்களை வழக்கப்படி பாவின் மூலமாக வெளியிட்டாள். இவ்வாறு உலகநன்மைக்குப் பாடுபடுவதினால் உண்டான சந்தோஷம் கொஞ்சநஞ்சமல்ல. இதனுடன், ஓர் பிள்ளை பிறந்து அவளுக்கு உவப்பு அதிகமாகியது. இறந்தாலொழிய ஜீவனோடு சுகமுறுவதில்லை என்றே எண்ணிப் பிராணத்தியாக நிலைமையில் உல

கப்பற்றற்று நின்றவர்களுக்கு உலகவாழ்க்கையில் உவகை பிறந்து மக்கட்பேறு முண்டாகி மானிடர்க்குண்டாகும் எல்லாச்சுகமும் பெறும்படியான காலமும் நேர்ந்தது. இது அவளது புண்ணியத்தின் பலமன்றோ ?

இங்கிலாந்துநாட்டில் ஸம்ஸ்தான வித்வான் என்று ஒருவரை அரசி நியமிப்பதுண்டு. அப்பெருமை வகித்திருந்த உவர்ட்ஸ்வர்த்து என்னும் மஹாகவி 1850-ம் வருஷத்தில் இறந்துபோகவே, அந்த ஸ்தானத்துக்கு நமது மாதுசிரோமணியை நியமிக்கலாமென்று தகுந்த பத்திராதிபர் ஒருவர் அக்காலத்தில் எழுதினார். இச்சிறப்பு ஸ்திரீகளில் எவருக்கும் இதுவரையில் உண்டானதில்லை என்றாலும், நமது விக்டோரியா சக்கரவர்த்தினியார் இராஜ்ஜியபாரத்தில் பெண்கள் அடைந்த பெருமையும் கீர்த்தியையும் இது நன்றாய் விளக்கும் என்று எல்லாரும் எண்ணினார்கள். அந்தப்பிரகாரம் நிறைவேறாவிடினும், அக்காலத்திலுள்ள காவிய பரிசோதகரும் காவியக்குறை கூறுவோரும் கூட இவளது கவிகளை மிகவும் உத்தமமாக மதித்தார்கள் என்று இது தெற்றெனத் தெரிவிக்கின்றதல்லவா ?

"அரோராலே" என்பது அவளது மிகப் பெரிய காவியம் என்றும், அவளது பாடல்களுக்குள் ஆழ்ந்த பொருளும் பெருமையும் வாய்ந்ததென்றும் அவளே கூறியிருக்கிறாள். ஒன்பது அதிகாரங்களடங்கிய அந்தக்காவியமானது அம்மாது ப்ளாரென்ஸில் வாஸமாயிருந்தகாலத்தில் 1853-ம் வருஷத்தில் ஆரம்பமாகி முற்றுப்பெற மூன்று வருஷகாலம் சென்றது. 1856-ம் வருஷத்திலே வேனிற்காலத்தில் இங்கிலாந்துக்குப் போயிருந்தபோது அதை முழுதும் எழுதி முடித்ததாகத் தெரிகிறது. வருத்தத்தோடு இத்தனைகாலம் அதுவிஷயத்தில் அவள் முயன்றபோதிலும், இந்தியாவிலிருந்து லண்டனுக்குப் போகும்போது வழியில் இக்காவியம் வரையப்பட்ட புஸ்தகமும், அதோடு தனது குமாரன் இங்கிலாந்தில் முதல்முதல் போட்டுக்கொள்ளவேண்டியதென்று வெகு நேர்த்தியாய் அலங்

காரஞ் செய்திருந்த உடுப்புகளும் வைக்கப்பட்டிருந்த பெட்டி காணுமல் போனபோது, நமது எலிஜபெத்து ப்ரௌனிங்கு அந்தக் குழந்தையின் உடுப்புக்காக அதிகமாய் விசாரப்பட்டாளே யொழிய எழுதிய புத்தகம் போனதைப்பற்றிச் சற்றேனும் வருத்தமுறவே இல்லை. அதிஷ்டவசமாய் அந்தப்பெட்டி கஸ்டம் ஆபீஸிலே நிலவறையில் ஒரு மூலையிலே மறைக்கப்பட்டிருந்ததை அவளது தம்பி தேடிக்கண்டெடுத்துக்கொண்டு வரவே அவளது விசாரம் நீங்கியது.

அந்தக் காவியமானது அவளது வாழ்க்கையின் சரித்திரமேயாம். அவள் பட்ட கஷ்டநஷ்டங்களையும் அவளது குணகுணங்களையும் நன்ருய் அறியவேண்டினும், மிகவும் கீர்த்தி பெற்ற மாதுசிரோமணிகளில் சிறந்தவளாகிய எலிஜபெத்தின் சத்திய சரித்திரத்தைப் படிக்க விரும்பினுலும், அவளாலேயே சுயசரித்திரம்போலும் கதைபோலும் எழுதிவைக்கப்பட்ட "அரோராலே" என்னும் காவியமே தகுந்ததாகும் என்று, அவளது சரித்திரத்தைச் "சிறந்த மாதர்தரங்கிணியில்" சுருக்கி எழுதிய ஜான் இங்கிராம் என்பவர் கூறியிருக்கிருர்.

இத்தாலி நாட்டு நன்மையே அவள் மனதில் குடிகொண்டிருந்தமையால், 1859-ம் வருஷத்தில் இத்தாலியர்கள் சுவதந்தரமடையக் கிளம்பினபோது தனது நுண்ணறிவாலும் எழுதுகோலாலும் அவர்களுக்கு வெகுவாய்த் துணைசெய்து வந்தாள். பிரான்சு நாட்டார் இவர்களுக்கு உதவியாக முன்வரவே, மூன்ருவது நெபோலியனை மஹாபுருஷனுக மதித்திருந்தாள். அவர் சொல்படி நிறைவேருமல், இத்தாலியர் தோல்வியுற்று, வில்லா பிரான்கா என்னும் சமாதான உடன்படிக்கை நடந்தேறியதே அவளுக்குத் தொலையாத தொல்லையும் தீராத நோயுமுண்டாக்கியது. இக்கவலையால் உண்டாகிய வியாதி அவளுக்கு நீங்கவே இல்லை. என்றுலும் இத்தாலி நாட்டு விஷயமாய் மிகக் கொதிப்பாயும் உருக்கமாயுமுள்ள பாடல்களை எழுதாமலிருக்கவில்லை. அதே வருஷத்தில் இப்பாடல்களெல்லா மடங்கிய கடைசி புஸ்தகம் அச்சிட்டு வெளியாயிற்று.

1860-ம் வருஷத்தில் நீங்காத நோய்கொண்டு இருமலினால் வருத்தமுற்றுப் படுக்கையாயிருக்கையில் உடன் பிறந்தாள் இறந்துபோனாள். அதற்குப் பிற்பாடு அவளுக்கு உடம்பு சௌக்கியமாகவே இல்லை. பிறகு ரோமாபுரியிலிருந்து ப்ளாரென்சுக்குத் திரும்பிப்போனாள். ஆயினும் நோய்முற்றி அவளுக்கும் கூட வியாதியின் கொடுமை வெளியாகாமலே குணமாவதுபோல் தோன்றிக் கடைசியில், தனது பிள்ளைக்கும் கணவனுக்கும் தன் தேககுணத்தைப்பற்றித் தைரியம் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே தேகவியோகமானாள்.

ப்ளாரென்சு நகரத்தில் அவளை அடக்கம் செய்தார்கள். அவளும் அவள் புருஷனும் மிகவும் அன்போடு சுகமாகவாழ்ந்து வந்த வீட்டின்மேல் சலவைக்கல்லொன்று பதித்து அதில் உசிதமான ஒரு சாசனமும் எழுதுவித்தார்கள்.

அவள் இறந்த ஒரு வருஷத்துக்கெல்லாம் அவளது பாடல்களில் அச்சிடப்படாதவைகளை யெல்லாம், அச்சிடுவித்து அவளது கணவன் "நன்றியுள்ள ப்ளாரென்சு நாட்டாருக்கு" என்று அரங்கேற்றினார். அதில் எலிஜபெத்தாருடைய சிறந்த பல பாடல்களும், கிரீக்கு பாஷையிலிருந்து மொழிபெயர்த்த பல பாடல்களும் மொழிபெயர்ப்புகளுமுள்ளன.

அமெரிக்காகண்டத்துச் சிறந்த சிற்பசாஸ்திரியாகிய ஸ்டோரி என்பவர் இவளை மிகவும் புகழ்ந்து வர்ணித்திருக்கிறார். இவளைப் பார்த்தவர்களில் ஆசைப்படாதவர்களில்லை. இவளது முகத்தின் தெளிவும், பெருந்தன்மைவாய்ந்த நற்குண நற்செய்கைகளுமே ஆழ்ந்த பொருளுடைய பெரிய பாடல்களுக்கு ஆதாரமானவை என்று நன்றாய்த் தெரிவிக்கின்றன. இவள் எவ்வளவு வருத்தமநுபவிப்பினும் அதைப் பிறர்க்கறிவியாள். நன்மையும் சத்தியமுமே தொழிலாக மேற்கொண்டொழுகுபவள். நுண்ணிய கருமும் எண்ணித் துணியும்படியான நிதானமுடையவள். நூற் பருங்கேள்வி யுடையவளாயினும் எல்லாரிடத்திலும் தயையும் இரக்கமுமுடையவள், எல்லாரையும் நல்லவரென்றே மதித்து

ளாகையால் ஒருவரிடத்திலும் அவளுக்குச் சந்தேகமுண்டாவதே இல்லை. இந்த உத்தமி நம்முடைய ஜீவகாலத்திலேயே வாழ்ந்து புகழ்பெற்றவள் என்பதை எண்ணுங்கால், எத்தனை அற்பனுயி னும், ஒவ்வொருவனும் தன்னுலியன்றமட்டும் வருந்தித் தன் கடமையை நடத்துவானாயின், தானும் சுகமடைந்து உலகத்தார்க் கும் நன்மை உண்டாக்குவான் என்று தெளிவாய் விளங்கு கின்றதல்லவா ?

''''''''''''''''''''''''''''''''''''''''

# பஞ்சதந்திரம்.

இரண்டாவது

## சுகிர்லாபம் அல்லது நட்புப்பேறு.

புத்திசாலிகளா யிருக்கிற சிநேகிதர்கள் திரவிய மில்லாமலி ருந்தாலும், வேறே சாதனங்க ளில்லாவிட்டாலுங் காகமு மெலியு மாமையு மானு நட்பினு லொன்றை யொன்றுகாப்பாற்றினற்போ லொருவர்க் கொருவ ருதவுவார்க ளெனச் சோமசன்மா சொல்ல, ராஜகுமாரர்களதெப்படி யெனச் சொல்லத் தொடங்கினன் :—

"கோதாவரிக் கரையிலிருக்கிற வொரு பெரிய வன்னிமரத் தில் லகுபதனென்னுங் காகம் வாசஞ் செய்துகொண்டிருக்கையி லொருநாள் விடியற்காலத்தி லங்கே யமனைப்போல மிகவும் பயங் கரமா யொருவேடன் வந்தான். லகுபதன னவனைப்பார்த்துப் பயப்பட்டு, இந்தத் துராத்மா வென்ன பண்ணுவானே தெரிய வில்லை; ஆகையா லிதைச் சோதிக்க வேண்டுமென் றிரைதேடுகிற யத்தனத்தை விட்டிருக்க, இதற்குள்ளே யவ்வேடன் வலையை விரித்துப் பலவகைப்பட்ட தானியத்தைத் தெளித் தங்கே யோர் செடிமறைவிற் பதுங்கிக்கொண்டிருந்தான். அதன்பிற்கு தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்திறங்கின சித்திரக்கிரீவ னென்னும் புருவரசு வங்கே யிறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன் பரிவாரப் புருக்களுடனே "இந்த நிர்மானுஷிய மான காட்டில் தானிய மெப்படி வரும்? யாராகிலும் கொண்டு வந்து போட்டிருக்கவேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாம லிதைப் பக்ஷிக்கலாகாது; ஒரு பிராமணன் பொற்காப்புக் காசைப் பட்டுப் புலியினு லெப்படி மரண மடைந்தானே வப்படிக்கேதோ

வொரு விபரீதமாகத் தோற்றுகிறது" என புருக்க ளதைக்கேட்டு "அதெப்படி மஹாராஜாவே" எனச் சித்திரக்கிரீவன் சொல்லு கிறது :—

"நான் தென் காட்டில் மேய்ந்துக்கொண்டிருக்கையிற்பார்த் ததைக் கேளுங்கள். ஒரு கிழப்புலி பலவீனத்தா லாகாரஞ் சம்பாதிக்கக்கூடாம லோரேரி கரையில் நீராடிக் கையில் தருப்பை வைத்துக்கொண் டுட்கார்ந்திருக்கையி லொரு பிராமண னந்த வழியில் வந்தான் ; புலி யவனைப்பார்த்து, "ஓ பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகிறேன் வா" என, இதைக்கேட் டந்தப்பிரா மண னப்புலியைப்பார்த் திந்தக்காப்பு நமக்கு வலியக்கிடைக் கிறது ; மரணத்துக் கிடமாகிய புலியின் கிட்டப் போகலாகாது ; ஆகையா லிந்தக்காப்பி லாசைவைக்கலாகா தென்போமானல் மரணத்துக்கு நாலண்டையும் வழி யாகையா லிதைக்குறித்துப் பிரயத்தன மவசியம் பண்ணவேண்டுமென்று தன் துராசைக் கேற்பத் தனக்குள்ளே யாலோசித்து நிச்சயித்துக்கொண்டு புலி யைப்பார்த்து "ஐயா புலியாரே! காப்பெங்கே யிருக்கிறது ?" என, புலி கையில் வைத்துக்கொண்டு "இதோ பாரும் பிராம ணோத்தமா" எனக் காண்பித்தது. பிராமணன் "உன்னிடத்தி லெனக்கெப்படி நம்பிக்கை ?" என, புலி, "நான் வைகறையில் மூழ்கி நித்தியதானம் பண்ணிக்கொண் டிருக்கிறேன் ; நகமும் பல் லும்போன கிழவனு யிருக்கிறேன் ; இப்போதென்னிடத்தில் நம் பிக்கை யில்லையா ? வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை யென்னு மிவ்வெட்டுத் தருமங் களேயு நானறிந்திருக்கிறதனு லிந்த வபூர்வ வஸ்துவை யார்க்காகி லுங் கொடுக்க விச்சிக்கிறேன் ; இதனு லென்னிடத்தில் நற்குண மிருக்கிறதென்று மெவ்வளவானுலுந் துர்க்குண மிருக்கிற தென் றும் அறியவில்லையா ?" என, அப்போது பிராமணன் இதுமெய் தான், ஆனுலும் புலி மனிதரை யடித்துத்தின்னுகிறதென்று மிகவும் லோகாபவாத மிருக்கிறது" எனப் புலி "நான் தரும சாஸ்திரமு மறிந்திருக்கிறேன் ; தன் பிராணன் தனக்கெப்படித் தித்திப்போ வப்படி யெல்லார்க்கு மிருக்குமென் றறிந்து, சாதுக் கள் பிராணிகளிடத்தில் தயையா யிருக்கிறார்கள் ; தன்னைப்போ

லச் சுகதுக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கிறார்கள்; நீ மிகவும் தரித்திரனானகையா லுனக்குக் கொடுக்க யத்தனிக்கிறேன்; சாஸ்திரமு மிப்படியே யிருக்கிறது; எப்படியு மேழைக்கே கொடுக்க வேண்டும்; செல்வமுள்ளவனுக்குக் கொடுக்க லாகாது; மருந்து நோயாளிக் கெப்படிக் குணங்கொடுக்குமோ வப்படி நோயில்லாதவனுக் காகுமா? நீ யிந்த வேரியிலே மூழ்கிவந்து காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ" என்றவுடனே, பிராமணன், ஐயோ! பிராமணனுக்குப் பின்புத்தி யாகையால் புலியின் பேச்சை நம்பி ஸ்நானம் பண்ணுகிறதற்கு வேரியி லிறங்கினவுடனே உளையிற் புதைந்து காலைப் பிடுங்கிக்கொண்டு வரக்கூடாமல் திகைத்தான். புலி யதைப்பார்த்து, "பிராமணா! பயப்படாதே, நானுன்னைச் சேற்றினின்று மெடுக்கிறேன்; சற்றிரு" என்று சொல்லிக்கொண்டு மெல்லெனப்போ யவனைப் பிடித்துக்கொண்டது. அப்போது பிராமண னெண்ணமிடுகிறான்; துஷ்டர்கள் வேதாத்தியயனம் பண்ணியிருந்தாலுந் தருமசாஸ்திர மறிந்திருந்தாலு மவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கலாகாது. எவன் சுபாவ மெப்படியோ வதெப்போதும் போகாது. இப்படியிருக்கையில் நம்முடைய ஜாதிக் கியல்பாயிருக்கிற பேராசையினா லிந்தத் துஷ்டனிடத்தில் விசுவாசம் வைத்து மோசம் போனே னென்றிப்படிப் பச்சாத்தாபப் பட்டுக்கொண்டிருக்கையில் அந்தப் புலி கொன்றுதின்றது.

ஆகையால் மிகவு மாலோசனைபண்ணி யேதொன்று செய்யத்தக்கதோ வதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கு நேரிடாது" என்றிப்படிச் சித்திரக்கிரீவன் சொன்ன வார்த்தையைக்கேட் டொருபுறு கர்வத்தோடு "இப்படி யாலோசித்தா லோ ரிரையு நமக் ககப்படாது; மேலும் வெட்கப்படுகிறவன், பொறுமையுள்ளவன், சந்தோஷப் படாதவன், குரோதமுள்ளவன், நீராச்சந்தேக முள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன், இவ்வாறுபேருந் துக்கத்தையே யனுபவிப்பார்கள்" என, இதைக்கேட்டுப் புறுக்களெல்லாந் தானியத்தைத் தின்னும்பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி வலையிலகப்பட்

புறுவரசனைப்பார்த்தெல்லாரு மென்சொல்லைக் கேளா மற் போனார்கள். இப்போது நா னென்றியா யிருந்து பல னில்லை; என்று சொல்லி அதுவும் வலையில் வந் தகப்பட்டது. வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக்கொண்டதைப்பார்த்து அதனி டத்திற்கு வரத் தொடங்கினான். அதைப் புறாக்கள் கண்டு, சித் திரக்கிரீவனைப் பார்த்து "நாங்கள் நீசன் புத்தியைக்கேட் டுன்னை யவமானம் பண்ணினோம்; அதன் பலன் பிராப்தியாயிற்று" என, அப்போது சித்திரக்கிரீவன் "இப்போ திதைச்சொல்லிப் பய னென்ன? இதற்கோருபாய மிருக்கிறது; எல்லோரும் வலை யோடுகூட வொருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போகவேண் டும்; அப்படிச் செய்தாற்றான் பிராணனைக் காப்பாற்றலாம்" என, இதைக் கேட்டவுடனே யெல்லாப் பறவைகளும் வலையோடுகூடச் சடிதியிற் பறந்துபோயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த் தாச்சரியப்பட்டு இவைக ளொரே மனதாய் வலையைக் கொண்டு போயின. ஆயினு மிவைகளி லொன்றுக் கொன்று சண்டை நேரிடும்; அப்போ தென்கையி லகப்படுமென நினைத்துக்கொண் டவைகளின் பின்னே யோடும்போது புறாக்கள் கண்ணுக்கு மறைந்துபோய்விட்டன. பிறகவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்துவிட்டான். இவ்வாச்சரியமெல்லாம் பார்த்திருந்த லகுப தனனென்னுங் காகம் அந்தப் புறாக்களின்பின்னே போயிற்று. கபோதராஜா தன் கூட்டத்தைப் பார்த்து "கண்டகிநதி தீரத்தி லிருக்குஞ் சித்திரவனத்திலென் சிநேகிதனான இரணியகனென்னு மோரெலியரச னிருக்கிறான்; அவன் பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான்; அங்கே நடவுங்கள்" என, இதைக்கேட்டப் படியே யெலியரசன் வளையண்டை யிறங்கின. அப்போது எதாவ தாபத்து நேரிடு மென்பதைக் குறித்துத் தன் வளைக்கு நூறு வழி செய்துகொண் டுள்ளேயிருந்த எலியரசன் புறாக்க ளிறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்தடங்கி யிருக்கையிற் சித்திரக்கிரீவன் "சிநேகிதா இரணியகனே! எங்களோடே யேன் பேசவில்லை?" என, இதைத் தன் சிநேகிதனுடைய தீங்குரலென் றறிந்து சந் தோஷத்தோடு கூடச் சீக்கிரமாக வளையின் றும் வந்து, "நான்

புண்ணியவா னுகையாற் சித்திரக்கிரீவனென்னு மித்திரன் என் வீட்டுக்கு வந்தான்; இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு சம்பாஷிக்கிறதிலும் வேறே யானந்த மேது?" என்று உபசாரஞ் சொல்லிப் பிறகதனுடைய அவஸ்தையைப் பார்த்து மிகவுந் துக்கித்து, "மித்திரா! நீ யெல்லாரைக் காட்டிலுஞ் சமர்த்தனுமே, உனக் கிப்படிப்பட்ட காரிய மெப்படி நேரிட்டது?" என, புறு "எந்தக்காலத்திலெது நடக்குமோ வது நடக்கும்; விதி வலிது; அதன்முன் யாருடைய வுபாய நடக்கும்? கடல் பெருகி மேலிட்டாலதற்குக் கரையேது?" என, இரணியகன் "இந்தப்பேச்சு மெய்யே; நூறு நாழிகைவழித் தூரத்திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்துகொண்டுபோகிற நீ யின்றைக்கு வேடன் வலையிற் பாராமற் சிக்கிக் கொண்டையே பார்; சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும் யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும் புத்திசாலிகளுக்கும் வறுமை வருதலுந் தெய்வத்தின் மகிமையெயல்லாம் வேறல்ல" என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண் டிருக்கிற வலைக் கயிற்றை யறுக்கத்தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன், "மித்திரா! முன்னே யென் பரிவாரத்தினுடைய கயிற்றை யறு; பிறகென் பாசத்தைத் துணி" எனக் கேட்டு, எலி "என் பல்லு மிகவு மெதுவானது; அதற்குப் பலமுங் கொஞ்சம்; இத்தனை பெயருடைய பந்தனைக ளெனக் கெப்படி யறுபடும்? உன் தளையை யறுத்துப் பின்னென் சாமர்த்தியத்துக்குத் தக்கதாக வவர்களுடைய தளையையு மறுப்பேன்" எனச் சித்திரக்கிரீவன் "நல்லது முன்னே யிவர்களுடைய பாசத்தை யறு" என, இரணியகன் "தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும்; அறம் பொரு ளின்பம் வீடாகிய விவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனமாகையா லதைக் காப்பாற்றினுலெல்லாவற்றையுங் காப்பாற்றினுற்போ லாகிறது" என, சித்திரக்கிரீவன் "இந்த நீதி சரிதான்; ஆயினு மிப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதற் கல்லவோ என்னை யிவர்கள் ராஜாவாக நினைக்கிறார்கள்? ஆகையா லென் பிராணனிடத்தி லிச்சையைவிட் டிவர்களைப் பிழைப்பி" என, அதைக்கேட் டெலி "நீ பரமசாது,

அடுத்தவர்களை யாதரிக்கிறவனு யிருக்கிறாய்; எசமானனிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனும் சேவகனிடத்திற் பிரீதியா யிருக்கிற வெசமானனுஞ் சுகமடைவார்கள்" என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையு மறுத்துச் சித்திரக்கிரீவனுடைய கட்டையுஞ் சேதித்தது. பிறகொன்றுக்கொன்று தழுவிக்கொண்டு பிரிய வார்த்தைகள் சொல்லின. சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடுகூடத் தன்னிடத்திற்குப் போனது. லகுபதனனென்னுங் காக மிவை யெல்லாம் பார்த் தாச்சரியப்பட் டிரணியகனை நோக்கி, "நீ பாக்கியவானு யிருக்கிறு யாகையால் நானு முன் சிநேகத்தை விரும்புகிறேன்; நீ தயைசெய் தெனக்குச் சிநேகனுக வேண்டும்" என, அப்போ திரணியகன் "நீ யார்?" எனக் காகம், "நான் லகுபதன னென்கிற காக்கை" என், அதைக்கேட் டெலி "உனக்கு மெனக்கும் வெகுதூரம், உலகத்திற் சமானஸ்தர்களுக்கே சிநேகமுண்டாகிறது; நா னுனக்கிரை; நீ என்னைத் தின்கிறவன்; இப்படியிருக்கையி லிதெப்படியாகும்? ஆபத்துக்கே முகாந்திரமாம்; நரி சிநேகத்தினு லொருமான் வலையி லகப்பட்டதுபோ லுன்னு லெனக்குப் பொல்லாங்கு நேரிடும்" என; லகுபதனனதைக்கேட்டு "மா னெப்படி வலையிற் சிக்கிக்கொண்டது?" என, எலி சொல்லத் தொடங்கிற்று:—

"மகததேசத்திற் சண்பகவனத்தில் மானுங் காகமு மொன்றுக்கொன்று நட்பாயிருந்தன. அப்படி யிருக்கையி லந்தமான் மனதின்படி புல் முதலானவைகளை மேய்ந்து கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த்துத் தனக்குள்ளே யாலோசித் திவன் நமக்கசாத்தியனு யிருக்கிறானுகையா லிவனை வஞ்சனையாற் கொல்ல வேண்டுமென் றிப்படி நிச்சயித்து, அதன் சமீபத்திற்போய்ச் "சிநேகிதா! சுகமா?" என, அதைக்கேட்டு மான் "நீ யார்?" என, நரி "நான் க்ஷுத்திரபுத்தி யென்கிற நரி; இந்தக் காட்டில் யாருமற்ற பாவியா யொருவனுகத் திரிந்துகொண் டிருந்தேன்; இன்றைக் குன்னைப்பார்த்து மிகுந்த சந்தோஷத்தை யடைந்தேன்; இப்போ துனக்கு வேலைசெய்துகொண் டுன்னிடத்திலிருக்க விச்சிக்கிறேன்" என, இதைக்கேட்டு மான் "நல்லது" என்று

பொழுது போனவுடனே யிரண்டுஞ் சண்பகமரத்தின் கீழ் வந்தன. அம்மரத்தின்மேல் வாசம் பண்ணிக்கொண் டிருக்கிற மானின் சிநேகிதனாகிய சுபுத்தி என்னுங் காக மிவ்விரண்டையும் பார்த்து, மானை "ஓ மித்திரா! உன்னண்டையி லிருக்கிறவன் யார்?" என, மான் "இந்தச் சம்புக னென்னுடன் சிநேகிக்க விரும்புகிறான்" என, அப்போது காகம், "மித்திரனே! சடிதியில் வந்த வழக்கமில்லாதவனை நம்பலாகாது; ஒருவன் குலமு நடத்தையுந் தெரியாம லவனுக் கிடங்கொடுத்தா லொரு பூனைக்குச் சரற்கவனென்னுங் கழு கிடங்கொடுத் திறந்தாற்போல நேரிடும்" என்றது.